# சொல்வயல்

திங்கள் மின்னிதழ்

சொல்வளமே மொழிவளம்
நெல்வளமே நாட்டின்வளம்

சொற்குவை தேரும் பாவலர் மேவத் தொகுப்பீடம்
(திருவிளையாடற்புராணம்
தருமிக்குப் பொற்கிழியளித்த படலம்)

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

வயல் : 3 விளைச்சல் : 22 திருவள்ளுவர் ஆண்டு 2053 மார்ச்சுத் திங்கள் 2022

## உள்ளே...




- வானூர்தியியல் கலைச்சொற்கள்
- கேளாரும் வேட்ப மொழிவதாம் சொல்
- தமிழ்மொழி அகராதிகளில் தமிழர் பண்பாடு
- பல்புகழ் நிறுத்த படிமையோன்
- contribution of tamil words to english dictionary - an etymological study
- பலபொருளொருசொற்கள்
- அகரமுதலி இயக்ககச் செயற்பாடுகள்










# வானூர்தியியல் கலைச்சொற்கள்

| | |
|---|---|
| Air Crash | வானூர்தி மோதல் |
| Air Route | வான் தடம் |
| Anemometer | வளிமானி |
| Auto Pilot | வலவன் ஏவாத் தன்னியக்கம் |
| Cockpit | வலவன் அறை |
| Commerial Pilot | வணிக வலவன் |
| Hangar | வானூர்திப் பணிமனை |
| Hodograph | திசைவேக வரைபடம் |
| Orometer | பல்திறன் உயரமானி |
| Rampart | வழித் தடை |
| Air Shed | வானூர்தி நிறுத்துமிடம் |
| Side Line | பக்கப் பாதை |
| Tail Camp | வால் விளக்கு |
| Tail Wheel | வால் உருளி |
| Tano Meter | வேகமானி |
| Aileron | வானூர்தி நிலைநிறுத்தி |
| Air Lock Strip | வானூர்தி வளிநிலைப்படுத்தி |
| Projectile | வானூர்தி ஏவுகை |
| Radio Telegraphy | அலைவழித் தொலைவரி |
| Radio Telephony | அலைவழித் தொலைபேசி |
| Anti Graft | வான்படைத் தகர்ப்பு |
| Aviette | மிதி வானூர்தி |
| Air Strip | காற்றுப்பட்டை |
| Space Gene | விண்வெளி வீரர் மரபணுமாற்றம் |
| Hover Plane | வட்டமிடு வானூர்தி |

**சொற்குவை (sorkuvai.com) வலைத்தளத்தில் தமிழுக்கு நிகரான ஆங்கிலச் சொற்களையும், ஆங்கிலத்திற்கு நிகரான தமிழ்ச்சொற்களையும் பார்த்துப் பயன்கொள்ளலாம்.**


# சொல்வயல்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு
திருவள்ளுவர் ஆண்டு 2053 – மாசி
மார்ச்சுத் திங்கள் 2022

ஆசிரியர் : முனைவர் **கோ.விசயராகவன்**
இயக்குநர்

பொறுப்பாசிரியர் : முனைவர் வே.கார்த்திக்

இதழ்க்குழு : திரு. கி. இராமர்
திரு. ஏ. காந்தி
திரு. ப. தீபக்



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
முதல் தளம், நகராட்சி நிருவாக அலுவலகக் கட்டடம்,
எண்.75, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி. நகர், சென்னை - 600 028.
கட்டணமில்லா அழைபேசி : 14469
மின்னஞ்சல் : solvayal@gmail.com
வலைத்தளம் : www.sorkuvai.com

# கேளாரும் வேட்ப மொழிவதாம் சொல்

சொற்களைக் கேட்டவர்தம் உள்ளத்தை வயப்படுத்துவதோடு அவ்வாறு கேட்க இயலாதவரும் கேட்க விரும்புமாறு சொல்வதே சொல்வன்மை ஆகும். சிறந்த சொல் எது? என்று உணர்த்த இரு தன்மைகளைக் கூறும் வள்ளுவர், ஒன்று கேட்டுக் கொண்டிருப்பவரைத் தன்பால் ஈர்த்து முழுக்கவனமும் செலுத்த வைக்கும் தன்மை, மற்றொன்று சொற்கேளாதவரையும் விருப்பம்கொள்ளச் செய்து தூண்டக்கூடிய சொற்றிறமை ஆகும் என்கிறார். வழுவின்மை, சுருங்குதல், விளங்குதல், இனிதாதல், விழுப்பயன் தருதல் என்றிவை சொல்லின் குணங்கள் ஆகும். ஒரு மேடையில் அல்லது குழுவில் அல்லது அலுவலகத்தில் நாம் பேசும் போது எல்லோரும் நம் பேச்சினைக் கேட்க விருப்பமாக இருக்க மாட்டார்கள். சில சமயங்களில் கேட்பவர் அதைப் புரிந்துகொள்ளும் திறன் குறைவாகவும் பெற்றிருப்பர். வேறு சில இடர்ப்பாடுகளும் இருக்கலாம். ஆதலால் அவ்விதம் உள்ளோரையும் நமது பேச்சை விரும்பிக் கேட்கவைக்கும் நயம் நமது சொல்லினில் இருக்க வேண்டும். அது கற்றவர் மட்டும் புரிந்துகொள்ளும் சொல்லாக இல்லாமல் கல்லாதவரும் எளிதாய்ப் புரிந்துகொள்ளும் வகையில் இருக்க வேண்டும்.

"நகைசால் வாய்மொழி" (ப.பத்து 55:12)
"செறுநரும் விழையும் செயிர்தீர் காட்சி"
(அகம். 66:3)

தங்குதடையற்ற பேச்சின் மூலம் கேட்பவரைப் பிற சிந்தனை இல்லாமல் பிணிக்கும் ஆற்றலைப் பற்றியது இவ்வடிகள். "திறனறிந்து சொல்லுக சொல்லை" எனும் அடிகளின் மூலம் ஒவ்வொரு சொல்லையும் அதன் வலிமையையும், உட்பொருளையும் அறிந்து சொல்லுக, அறம் பொருள் இரண்டையும் அடைய அதைவிடச் சிறந்த வழி ஏதுமில்லை என்கிறார் வள்ளுவப் பெருந்தகை.

மிகவும் பழமையான இலக்கண நூல்களில் ஒன்றான தொல்காப்பியம் நம் மொழியின் சிறப்புகளை எடுத்துரைக்கும் தொன்மையான நூலாகும். இதன் ஆசிரியர் தொல்காப்பியர் எனப் பாயிரம் மூலம் அறியும் நாம் அதை மூலநூலாகக் கொண்டு காலந்தோறும் பல வழிநூல்கள் தோன்றின என்பதையும் அறிகிறோம். முதலாவது எழுத்ததிகாரம் தனிமொழியிலும், புணர்மொழியிலும் உள்ள எழுத்துகளைப் பற்றி கூறுகிறது. இரண்டாவது சொல்லதிகாரம் மொழித்தொடர் (syntax) அமையும் பாங்கைக் கூறுகிறது. மூன்றாவது பொருளதிகாரம் எழுதப்படும் நூலிலுள்ள வாழ்க்கைப் பொருளையும் அப்பொருள் சொல்லப்பட்டுள்ள யாப்பு, அணி முதலான பாங்குகளையும் தமிழ்மரபையும் விளக்குகிறது.

சொல்வளம் இலக்கியச் செம்மொழிக்கெல்லாம் பொதுவாயினும் தமிழ்மட்டும் அதில் தலைசிறந்தது ஆகும். தமிழ் அல்லாத திராவிடமொழிகளின் அகராதிகளை ஆராயும்போது தமிழிலுள்ள ஒருபொருட் பலசொல் வரிசைகள் அவற்றில் இல்லாக்குறை எந்த அறிஞர்க்கும் மிகத் தெளிவாகத் தோன்றும்.. தமிழ்ப்பொதுமக்கள் உயர்ந்த பகுத்தறிவுடையவர். எத்தனையோ மொழியாராய்ச்சி நடந்துவரும் இக்காலத்திலும் எத்தனையோ மொழிகளினின்று கடன்கொண்ட ஆங்கில மொழிநூலிலும் இலையைக் குறிக்க (Leaf) என்ற ஒற்றைச் சொல்லே உள்ளது. ஆனால் நம் தமிழ்மக்களைப் போல் வன்மை, மென்மை அறிந்து தாள், இலை, தோகை, ஓலை எனப் பாகுபாடு செய்தார்களில்லை.

தமிழ்மொழி எத்துணைப் பொருள் வளமுடையது என்பது அனைவரும் அறிந்ததே! தமிழ்நாட்டில் நெல் வகைக்குக்கூட செந்நெல், வெண்ணெல், கார்நெல், சம்பா, மட்டைகார் என்றும், சம்பாவில் மட்டும் ஆவிரம்பூச்சம்பா, ஆனைக் கொம்பன் சம்பா என அறுபது தனித்தமிழ்ப் பெயர்கள் இட்டு அழைத்தனர். நெல்லில் மட்டுமா சொல் கண்டனர். ஓரறிவுயிர் முதல் ஆறறிவுயிர் வரை சிறுசிறு வேறுபாடுகளையும் இயற்கைச் சூழலியலையும் நுட்பமாய் நுணுகி ஆராய்ந்து சொல்லாக்கம் செய்தனர். அரிதாள் வகையும், அடிவகையும் குறிக்கும்போது,

இருவி (நெல், கேழ்வரகு முதலியவற்றின் அரிதாள் )
கட்டை (சோளம், கரும்பு முதலியவற்றின் அரிதாள்)
தூறு (தென்னை, பனை முதலியவற்றின் அரிதாள்)
முருடு (வேம்பு, புளி முதலியவற்றின் அரிதாள்)

அடிவகையாக
தாள், தண்டு, கோல், தூறு, தட்டு, கழி, அடி எனச் சிறப்பாகச் சொற்களை ஆண்டனர்.

ஆங்கிலம் எத்தனையோ சொல்வளம் மிக்கதாயினும் தமிழின் உறவுமுறைப் பெயர்கள் அங்கு இல்லை. அத்தை, சித்தி, மாமி, பெரியம்மா என அழகான உறவின் பிணைப்பையும், தொடர்பின் வேறுபாட்டையும் அறியாமல் ஒற்றைச் சொல்லில் aunty என்றும், அதே போல் uncle என்றும் கூறுகிறது. ஆனால் நம் தனித்தமிழ்ச் செம்மொழி உறவின் மேன்மையை உணர்த்தும் விதமாய் அருமை பெருமையாய்ச் சொற்களை ஆண்டுள்ளது. இது எம்மொழியிலும் இல்லாத பெரும்பேறாகும்.

| | |
|---|---|
| பரன் | பரை |
| ↓ | ↓ |
| சேயோன் | சேயோள் |
| ↓ | ↓ |
| ஒட்டன் | ஒட்டி |
| ↓ | ↓ |
| பூட்டன் | பூட்டி |
| ↓ | ↓ |
| பாட்டன் | பாட்டி |
| ↓ | ↓ |
| தந்தை | தாய் |
| ↓ | ↓ |
| மகன் | மகள் |
| ↓ | ↓ |
| பெயரன் | பெயர்த்தி |
| ↓ | ↓ |
| கொள்ளுப் பெயரன் | கொள்ளுப் பெயர்த்தி |
| ↓ | ↓ |
| எள்ளுப்பெயரன் | எள்ளுப்பெயர்த்தி |

பரம்பரை

உயிருள்ள மொழிக்குப் பற்றுக்கோடு மக்களாகிய நாமே. ஒரு மொழிக்கு முதலில் சொல்தான் வந்தது. எழுத்து பின் வந்தது. தொல்காப்பியப் பாயிரம் “எழுத்தும் சொல்லும் பொருளும் நாடி“ என்கிறது. மேலும் “எல்லாச் சொல்லும் பொருள் குறிதத்னவே“ என்கிறது. தமிழ் உலக மொழிகளில் மூத்ததும், தொன்மையானதும், செம்மையான மொழிவடிவம் பெற்றது எனவும், கிரேக்கம், இலத்தீன் சமற்கிருதம் உள்ளிட்டவைளுக்குத் தன் சொற்கள் பலவற்றை அளித்தது எனவும் நிறுவியவர் பாவாணர் அவர்கள். தமிழின் வேர்ச்சொல் வளத்தையும் செழுமையையும் சுட்டிக் காட்டி அதன் வளர்ச்சிக்கான வழியையும் உலகிற்கு எடுத்து இயம்பியவர் சொல்லாய்விற்காக அரும்பாடுபட்ட பாவாணர் அவர்கள்.

தொகுப்புக்கலைத் தோன்றலாகிய பாவாணர் அகரமுதலிகளைத் தொகுப்பதில் பேரார்வம் கொண்டுழைத்தார். அப்பணி வளர்ந்து கொண்டே இருந்தது... அவரது மூச்சின் ஓய்வு வரை. வாழ்நாளின் இறுதிநாள் வரை தமிழுக்காகவே வாழ்ந்தார். இதனைத் தமிழ்கூறும் நல்லுலகத்தார் அனைவரும் அறிவர். பாவாணரது தமிழ்ப்பணியைத் தமிழார்வலர்கள் அனைவரும் நினைந்து அவர்தம் வழியில்சென்று தமிழ்மொழிக்குச் சிறப்புச் சேர்ப்பதுடன் அதனைக் காப்பதும் அனைவரின் கடமையாகும்.

'மொழிஞாயிறு' தேவநேயப் பாவாணரின் கோட்பாடுகளின் அடிப்படையில், சொற்கருவூலங்களான அகராதிகளை உருவாக்குதல், தமிழ்க்கலைச்சொல்லாக்கம் ஆகிய மொழிக்காப்புப் பணிகளை இவ்வியக்ககம் செயற்படுத்திவருகிறது.

இந்த மொழிக்காப்புப் பணிக்குத் துணைநிற்கும் அகராதியியலாளர்கள், சொல்லாக்க வல்லுநர்கள், மொழியியலாளர்கள், தமிழறிஞர்கள், தமிழார்வலர்கள், ஆய்வாளர்கள், மாணவர்கள் உள்ளிட்ட அனைவருக்கும் இவ்வியக்ககத்தின் சார்பில் நன்றி நவில்கிறேன்.

இம்மாதச் “சொல்வயல்“ இதழுக்கு ஞாலமறிந்த அகராதியியல் அறிஞர் முனைவர் ச.சச்சிதானந்தம் அவர்களின், “தமிழ்மொழி அகராதிகளில் தமிழர் பண்பாடு“ என்னும் பொருண்மையிலான கட்டுரையும், சென்னை இலயோலா கல்லூரி ஆங்கிலத்துறைத் தலைவர் முனைவர் அந்தோணிசாமி அவர்களின், “contribution of tamil words to english dictionary - an etymological study” என்னும் பொருண்மையிலான கட்டுரையும், இலங்கை தென்கிழக்குப் பல்கலைக்கழக மொழித்துறைப் பேராசிரியர் முனைவர் கனகசபை இரகுபரன் அவர்களின்,“பல்புகழ் நிறுத்தபடிமையோன்“ என்னும் பொருண்மையிலான கட்டுரையும் அணிசேர்க்கின்றன. அப்பெருந்தகைகளுக்கு மனமார்ந்த நன்றியை உரித்தாக்குகின்றேன்.

இவ்வியக்ககம் நெறிப்படுத்தும் இணையவழிப் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்குகளில் பங்கேற்றுத் தமிழ்க் கலைச்சொற்களை அறிமுகம் செய்து உரையாற்றிய பலதுறை சார்ந்த அனைத்துத் தமிழுள்ளங்களுக்கும், அமர்வுகளில் பங்கேற்கும் அறிஞர்களின் ஒருங்கிணைப்பினைச் செய்துவரும் பாரிசு பன்னாட்டு உயர்கல்வி தமிழாய்வு நிறுவன இயக்குநர் முனைவர் பேரா. ச. சச்சிதானந்தம் அவர்களுக்கும் பயிலரங்கங்களுக்கான தொழில்நுட்ப ஒருங்கிணைப்பைச் செய்துவரும் சென்னை வேல்ஸ் அறிவியல் (ம) தொழில்நுட்ப உயர் ஆராய்ச்சி நிறுவனத்தின் தமிழ்த்துறை இணைப் பேராசிரியர் முனைவர் இரா. பன்னிருகைவடிவேலன் அவர்களுக்கும் அகம்நிறை அன்பு நன்றியை உரித்தாக்குகிறேன்.

தமிழ் என்னும் ஒற்றைப்புள்ளியில் ஒருங்கிணைந்த உள்ளத்தினராய் என்றென்றும் ஒருங்கிணைந்து செயலாற்றுவோம்!

செயலால் பேசுவோம்!

.......................................................................................

**தமிழுயரத் தாழ்ந்தான் தமிழன் -அவனே**
**தமிழுயரத் தானுயர்வான் தான்**

**“மொழிஞாயிறு“ தேவநேயப் பாவாணர்**

# தமிழ்மொழி அகராதிகளில் தமிழர் பண்பாடு

அகராதியியலாளர், முனைவர் ச. சச்சிதானந்தம்.

இயக்குநர் : பன்னாட்டு உயர்கல்வி தமிழாய்வு நிறுவனம். பாரிசு



## மொழியும் பண்பாடும்

ஒவ்வொரு மொழிக்கும் அதற்கே உரிய தனிப்பண்பாடு உள்ளது. சமுதாயத்தின் பண்பாட்டிற்கு அமையவே மொழியின் பயன்பாடும் இயங்குகின்றது. மொழியின்கண் வெளிப்படும் ஒவ்வொரு சொல்லும்கூட ஒரு பண்பாட்டு வரலாற்றைத் தாங்கிநிற்கிறது. மனிதன், அவன் தனியாக வாழ்ந்தாலும் சரி, சமூகமாக வாழ்ந்தாலும் சரி, ஒரு வரையறுக்கப்பட்ட சமூகப் பண்பாட்டுச் சூழலிலேயே வாழ்கிறான். ஒரு தனிநபர் எந்தச் சமூகத்தைச் சேர்ந்தவர் என்பதைப் பண்பாடு அடையாளம் காட்டுகிறது.

பண்பாடு மாறிக்கொண்டே வரும் தன்மை உடையது. இந்திய மொழிகள் அனைத்திலும் சமற்கிருதமயமாக்கல் (Sanskritization) பின்னிப்பிணைந்து இருக்கிறது. சமற்கிருதப் பண்பாடு தமிழ்மொழியில் மணிப்பிரவாளம் எனும் நடையைப் படைத்தது. இந்நாட்களில் ஐரோப்பியப் பண்பாட்டுக் கூறுகள் ஏறுமுகமாகக் குறுக்கிடுகின்றன. இதன் தாக்கங்களை அகராதியியலிலும் காணமுடியும்.

பண்பாட்டு வளர்ச்சியானது (Evolution of culture) விலங்காண்டிநிலை, காட்டாண்டி நிலை, நாகரிகம் என மூன்று படிநிலைகளாக வளர்ச்சி அடைந்தது என்றார் பண்பாட்டியல் வளர்ச்சி அறிஞரான இ.பி. டைலர். (Edward Burnett Tylor). இதனை ஒத்த சொற்புனைவு நிலைகளை அருஞ்சொல் பட்டியல், உரிச்சொல், உரிச்சொல் நிகண்டு, நிகண்டு, அகராதி நிகண்டு, சொற்கருவூலம், சொல்லகராதி, அகராதி, அகரமுதலி ஆகிய படிநிலை வளர்ச்சி நிலைகளையும் ஒப்புநோக்கலாம்.

## தமிழ்ப்பண்பாடு

தமிழ் அடிப்படையில் திராவிடப் பண்பாட்டு மொழி ஆகும். தமிழ்ப் பண்பாடு ஆரம்பத்தில் வாழும் சுற்றுச்சூழல் நிலப்பகுதி அடிப்படையில் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை எனப் பழந்தமிழர்களால் வகைப்படுத்தப்பட்டது. தமிழ் நிலத்தில் நிலவிய ஐந்திணைப் பாகுபாடுகள் பண்பாட்டு வேறுபாடுகளைக் காட்டி நின்றன.

இன்றைய சூழலில் தமிழ்ப் பண்பாட்டுப் பரப்பானது நிலம், சமூகம், வழிபாட்டுமுறை, தெய்வங்கள், கலைகள், திருவிழாக்கள் பிற வழக்காறு மரபுகளையும் வைத்து மாறுபடுகிறது. அந்தவகையில் தமிழ்ப்பண்பாட்டுக் கூறுகளாக, பழக்கவழக்கங்கள், நம்பிக்கைகள், உணவு, உடை, திருவிழாக்கள், விளையாட்டுகள், வழிபாட்டு நெறிகள், சிந்தனை நெறிகள், அறிவியல் நெறிகள் முதலானவை அமைகின்றன.

- *அம்மா, பூவும்பொட்டும், திருமணம், சுவாமி, தாலி, சேலை, வேட்டி, பூசை, தோசை, வடை, ஞானஸ்நானம், தர்கா, குருதட்சணை, குலதெய்வம், சீதனம், சோதிடம், அட்டமி போன்ற சொற்கள் தமிழ்ப்பண்பாட்டை வெளிப்படையாக உணர்த்தும் சொற்களாக விளங்குகின்றன.*

## சொல்லும் பொருளும்

மொழி ஒன்றின் வளர்ச்சி பெரும்பாலும் அம்மொழியின் சொற்களால் கணிக்கப்படுகிறது. மொழியின் வளர்ச்சியையும் கருத்து வெளிப்பாட்டுத் திறனையும் வெளிப்படுத்துவதற்கு உரிய கருவியாகச் சொற்களே திகழுகின்றன. சொல்லும் பொருளும் நாணயத்தின் இருபக்கங்கள் போன்று ஒன்றைவிட்டொன்று இணைபிரியாதன. அவற்றிற்கு இடையிலான உறவுதான் மொழி சொல்லுக்கும் அது குறிக்கும் பொருளுக்கும் இடையே நான்கு விதமான உறவுகள் காணப்படுகின்றன. அவை ஒரு சொல் பலபொருள் தன்மை, பல சொல் ஒரு பொருள் தன்மை, எதிர்த்தன்மை, மீச்சொல் உட்பொருள் சொல் தன்மை என்பன ஆகும். இவ்வகைப் பொருள் உறவுகளை விளக்குவனவே அகராதிகள்.

## அகராதி

ஒரு மொழியின் சொல்வளத்தையும் அதன் சொற்பொருளின் ஆழத்தையும், அவை பயன்படும் விதத்தையும் அவற்றின் வரலாற்று மூலத்தையும் இன்னோரன்ன பிறவற்றையும் அகரவரிசையில் தந்து நிற்பதே அகராதி எனப்படுகிறது. இதனால் அகராதிகள் மொழிகளின் காப்பகங்களாகவும் செயல்படுகின்றன. சொற்கள் தொடர்பாக எழும் வினாக்களுக்கும் ஐயங்களுக்கும் விடையளிப்பதற்குப் பயன்படும் மொழிக்கருவிகள் அகராதிகள் ஆகும். இவை மொழிகளின் பண்பாடு, மற்றும் நாகரிகங்களின் அடையாளமாகவும் பாதுகாப்புச் சொத்தாகவும் இலங்குகின்றன.

## தொல்லகராதிகள் தொல்காப்பியம் Vocabulary

'தெய்வம் உணாவே மாமரம் புள்பறை
செய்தி
யாழின் பகுதியொடு தொகைஇ
அவ்வகை பிறவும் கருவென மொழிப'
தொல்காப்பியம்

தொடக்ககால அகராதிகளான தொல்லகராதிகள் அனைத்தினதும் (சுமேரியன்

அக்காடியன் சொற்பட்டியல், தொல்காப்பியம், நிகண்டுகள், Aelfric இன் vocabularia) பொருட்புலங்கள் நெருங்கிய ஒப்புமை உடையனவாக உள்ளன. இதனால் அகராதிதொகுப்பதில் ஈடுபட்ட வெவ்வேறு பண்பாடுகளைக் கொண்டிருந்த அறிவாளிகள் ஒரே மாதிரி சிந்தித்திருக்கின்றனர் என அறியமுடிகிறது இவற்றின் பொருட்புல அமைப்புகளில் பொதுவாக முதலில் நோக்கப்படக்கூடியதாக இருப்பது தெய்வம் என்கிற பொருள். பொதுவாக எல்லாமொழிகளிலும் கடவுள், மதம் காரணமாகவே அருஞ்சொல்லகராதி தொகுக்கப்பட வேண்டிய தேவை ஏற்பட்டிருக்கிறது.

## தமிழ் அகராதியியல்

தமிழ் அகராதியியல், தொல்காப்பியத்தில் முளைவிட்டு, நிகண்டுகளில் காயாகி, அகராதிகளில் கனியாகி வளர்ச்சி கண்டிருக்கிறது. தமிழ் அகராதிகள் இலக்கண மரபில் பிறந்து நிகண்டு மரபில் தவழ்ந்து ஒருமொழி மரபில் நடைபயின்று இருமொழி மரபில் வளர்ச்சி அடைந்து பேரகராதிகளாகவும் சிறப்பகராதிகளாகவும் அறிவியல் அகராதிகளாகவும், இணையத்தள அகராதிகளாகவும் வளர்ச்சி கண்டுள்ளன.

தொல்காப்பியத்தில் கடினச்சொற்களுக்குச் சூத்திர வடிவில் பொருள் கூறும் முறை பின்பற்றப்பட்டுள்ளது. தொல்காப்பியத்தை அடிப்படையாகக் கொண்டு பல நூற்றாண்டுகளுக்குப் பின்னர் சொற்களைத் தொகுத்துப் பல்வேறு சொற்புலங்களில் பொருள் கூறும் நிகண்டுகள் தோற்றம் பெற்றன.

தொல்காப்பியத்தில் அகராதிக்கூறுகளாக, 1). ஒரு சொல் ஒரு பொருள், 2).ஒரு சொல் பல பொருள், 3). பல சொற்கள் ஒரு பொருள் என்பன காணப்பெறுகின்றன.

## நிகண்டு

வெவ்வேறு அரசர்களின் ஆட்சிமுறைகள், சைவம், வைணவம், சமணம், புத்தம் ஆகிய மதங்களின் வேரூன்றல்கள், கால அறிவுக்கேற்பப் படைக்கப்பட்ட இலக்கியங்கள், வடசொற்களின் படையெடுப்பு மற்றும் பண்பாட்டு மாற்றங்கள் ஆகியன தமிழில் மிகுதியான சொற்கள் தோன்றுவதற்கு மூலகாரணமாக அமைந்தன. இவ்வாறாகத் தோன்றிய தமிழ்ச்சொற்களின் பொருள்களையும் அவற்றின் பண்பாடுகளையும் அறிந்துகொள்ளும் தேவைக்காக உருவாக்கப்பட்டவையே நிகண்டுகள் ஆகும். அக்காலத்தவர்களின் இன்றியமையாத உணவாக இருந்த சோறு என்பதனைக் குறிக்க 24 சொற்கள் திவாகரத்தில் உள்ளன. இவ்வாறே கள்ளைக் குறிப்பதற்கு 48 சொற்கள் உள்ளன.

## இருமொழி, ஒருமொழி தமிழ் அகராதிகள்

போர்த்துக்கேயர், ஜேர்மனியர், டச்சுக்காரர், இத்தாலியர், ஆங்கிலேயர், பிரெஞ்சியர் என மேற்கு ஐரோப்பிய மொழி அகராதியியல் மதகுருமார்கள் தமிழ்நிலத்தில் வாழ்ந்து தத்தம் ஐரோப்பிய மொழிகள் தமிழ் என இருமொழி அகராதிகளையும், தமிழ் - தமிழ் ஒருமொழி அகராதிகளையும் தொகுத்து அளித்தனர். முதன்முதலில் கி.பி. 17ஆம் நூற்றாண்டில், சொற்கள் அனைத்தையும் தொகுத்து அகராதி முறையை உருவாக்கிய இம்மதகுருமார்கள் தமது நாட்டு அகராதி அமைப்பு முறையைப் பின்பற்றித் தமிழ் அகராதிக்கு ஒரு வடிவம் கொடுத்தனர்.

இவர்கள் அமைத்த அகராதிகளில் கடினமான சொற்கள், எளிய சொற்கள், மக்கள் வழக்குச் சொற்கள் என்பன இடம்பெற்றிருந்தன. இந்தியச் சைவம், சமணம், புத்தம் ஆகிய மதங்களின் பண்பாட்டுக் கூறுகள் கண்டிருந்த தமிழ்ப் பண்பாடு, ஐரோப்பிய கிறித்தவ மதக்கூறுகளுக்கும் இணக்கம் கொண்டது. இவ்வகராதிகளில் தமிழ், ஐரோப்பியப் பண்பாடுகள் வெளிப்படுத்தப்பட்டன. சிக்கலாக இருந்து வந்த தமிழ் நிகண்டுப் பயன்பாட்டினை ஐரோப்பிய அகராதியியல் முற்றாக மாற்றி தமிழகராதியியலுக்குப் புதுப்பிறவி வழங்கியது. கிறித்தவப் பண்பாடுகள் மட்டுமல்லாது அகராதியியல் அறிவியலும் தமிழுக்கும் புதுவரவு ஆகின.

## ஐரோப்பியர் உருவாக்கிய கிறித்தவத் தமிழ்ச்சொற்கள்

- கிறித்தவக் **கடவுளு**க்காக இவர்களால் உறுதிப்படுத்தப்பட்ட சொற்கள்:

தேவன், பராபரன், சர்வேஸ்வரன்- சருவெசுரன், தம்பிரான், அருளவல்லவர், பராபரசுவாமிஞ்

- வீரமாமுனிவர் தனது அகராதிகளில், கடவுளைக் குறிப்பதற்குக் கொடுத்த தமிழ்ச்சொற்கள் :

சதுரகராதி - கடவுள் - அருகன், குரு, தெய்வம், தேவன், தேவாதி, நன்மை, முனிவன்

- போத்துக்கீஸ் - இலத்தீன் - தமிழ் அகராதி - கடவுள் - அருகன், சறுவேசுரன், சறுவேஸ்வரன், சுயம்பு, சுவாமி, தம்பிரான், தேவன், தேவாதி, நன்மை, பரஞ்சோதி, பராபாவஸு, பொருள்வஸு, முனிவன், பரஞ்சோதி, பராபாவஸு, பொருள்வஸ்து.

- பிரெஞ்சு - தமிழ், அகராதி - கடவுள் - அருகன், குரு, சர்வேச்சுரன், சறுவேசுரன், சறுவேஸ்வரன், சுயம்பு, சுவாமி, தம்பிரான், தேவன், தேவாதி, நன்மை, பரஞ்சோதி, பராபரன், பராபாவஸு, பொருள்வஸு, முனிவன்.

கிறித்தவ மத அடையாளமான சிலுவை என்ற சொல் தமிழ்ச்சொல் அல்ல. அச்சொல் சிரிய மொழிச்சொல் (ப.அருளி. இவை தமிழல்ல என்னும் அயற்சொல் அகராதி)

## அகராதிகளில் தமிழ்ப்பண்பாடு

- **சதுரகராதி பெயர் காட்டும் தமிழ் ஐரோப்பியப் பண்பாடுகள்**

தமிழ்ப்பண்பாட்டிற்கான பெயர்: சதுரகராதி. ஐரோப்பிய அகராதியியற் பண்பாட்டிற்கான பெயர்:

| தமிழ்ப்பெயர் | இலத்தீனியப் பெயர் |
|---|---|
| முழுமையான விளக்கத்திற்கும் தமிழ் எழுத்துகளைப் புரிந்துகொள்வதற்கும் எனத் திரட்டப்பட்டு நான்கு பகுதிகளாக அமைக்கப்பட்ட தமிழ்மொழிக் கருவூலம் | Thesaurus linguae Tamulicae ad pleniorum planioremque scriptorium Tamulensium intelligentiam collegit ac quatuor in partes digessit |

## • யாழ்ப்பாண அகராதி அட்டை காட்டும் இரு பண்பாடுகள்

முன்னட்டை: அமெரிக்கஆங்கில அகராதியியல் பண்பாடு உள்ளட்டை : தமிழ்ப் பண்பாடு







பெயரகராதி எனும் யாழ்ப்பாண அகராதியின் அட்டையில் கடவுள் வணக்கம் என உள்ளது. இதன் கீழே சாலிவாகன சகார்த்தம், கிருஸ்து வருஷம், பிலபவ வருஷம் எனும் குறிப்புகள் முறையே தமிழ், கிறித்தவப் பண்பாட்டை எடுத்தியம்புகின்றன.



## தமிழ் அகராதிகள் காட்டும் தமிழ்ப் பண்பாடு

உடல் உறுப்புகளைக் காட்டும் படம் தமிழ்ப் பண்பாட்டினைக் காட்டும் வகையில் அமைக்கப்பட்டுள்ளது. உச்சந்தலை, நெற்றிப்பொட்டு, ஆணின் படம் என்பதால் மீசை உள்ளது. பாலுறுப்புக் குறிப்பிடப்படாமல் மறைக்கப்பட்டிருக்கிறது. - க்ரியா தற்காலத் தமிழ் அகராதி 2011.

## கல்யாணம், திருமணம் தொடர்பாக அகராதிகள் தரும் விளக்கங்கள்:

கலியாணம் - சந்தோஷம், சொந்த விவாகம் : பெயரகராதி - 1842.

கலியாணம் -சுபம், விவாகம், கொண்டாட்டம், பொன் - தற்காலத் தமிழ்ச்சொல்லகராதி - 1912

கல்யாணம் பெ. திருமணம். - க்ரியா

திருமணம் பெ..1: (பெரும்பாலும்) ஆணும் பெண்ணும் கணவன் மனைவியாகும் நிகழ்ச்சி அல்லது சடங்கு கல்யாணம்.ஓரினத் திருமணம்... சிலநாடுகளில் சட்டப்பூர்வமாக்கப்பட்டிருக்கின்றது

2. கணவன் மனைவியாக வாழும் சமூக ஏற்பாடு.... திருமணம் இப்போது பல மாறுதல்களுக்கு உள்ளாகி விட்டது. - 2008 (2011); - க்ரியா

கல்யாணம் பெ. 1.மங்கலம், சுபம். கல்யாண குணகண பரிபூர்ணனாய்(திருவாய்) 2.அட்டமங்கலம் 3. திருமணம். விவாகம்.. (கல்யாணம் என்பது எது வரை) 4.நல்லசெயல், சுபகாரியம். 5.கல்யாண குணம். 6. பொன் பெருசொல்லகராதி (தொகுதி - 5) - 2010.

*குறிப்பு: அண்மையில் கனடா நாட்டிலும், தமிழ்நாட்டிலும் வாழும் இரு பெண்இணையர்கள் இந்துமதமுறைப்படி திருமணம் செய்து வாழ்க்கையில் இணையர்கள் - கணவன்மனைவி ஆனார்கள் என்ற புதுச்செய்திகள் தமிழகச் செய்தித்தாள்கள்வழித் தெரியவந்தன.*

## தமிழ் அகராதிகளில் பண்பாட்டுப் பன்மை

தமிழ்நாட்டில் இராட்லர் அகராதி வெளிவந்த பின்னரும் யாழ்ப்பாணத்தில் தமிழ் அகராதித் தொகுப்புப் பணி தொடர்ந்து நடைபெற்றது. இந்தியத் தமிழுக்கும் இலங்கைத் தமிழுக்கும் இடையிலான வேற்றுமைகள் உள்ளமையே இதற்கான தேவை என வின்ஸ்லோ தனது முன்னுரையில் கூறினார். தென்னிந்தியாவிற்கும் யாழ்ப்பாணத்திற்கும் அதிக கலாச்சாரத் தொடர்புகளை 1852 இல் வெளிவந்த வின்ஸ்லோவின் தமிழ் ஆங்கில அகராதி ஏற்படுத்தியது.

பேரகராதியிலும், பெருஞ்சொல்லகராதியிலும் ஈழத்துத்தமிழ்ச்சொற்கள் சேர்க்கப்பட்டிருக்கின்றன. இக்காலத்தில் க்ரியாவினரும் தற்காலத் தமிழ் அகராதியில் 1700 இலங்கைத் தமிழ்ச்சொற்களைச் சேர்த்திருக்கின்றனர். இச்செயற்பாடுகள் இரு தமிழ்ப்பண்பாட்டுக் கூறுகளையும் இணைத்ததோடல்லாமல் தமிழ்நாட்டில் அகராதியியலாளர்களின் அகராதியியல் அறிவு வளர்ச்சியையும், மனவளர்ச்சியின் பண்பாட்டையும் உயர்த்திக் காண்பிக்கின்றன.

இந்தியா, இலங்கை, மலேசியா, சிங்கப்பூர் முதலான நாடுகளில் தமிழ்மொழி வழங்கப்படுகிறது. இந்நாட்டுத் தமிழர்களின் பண்பாடு அடிப்படைத் தமிழ்ப் பண்பாடாக இருந்தாலும் நாட்டுச்சூழலுக்குத் தகுந்தாற்போலத் தமிழ்ப் பண்பாடுகளில் சூழல்பண்பாடுகள் உள்ளன. இப்பண்பாட்டு

வேறுபாடுகளைத் தமிழ்ச்சொற்களிலும் பார்க்க முடியும். அகராதிகளிலும் காணமுடியும். இலங்கையில் இதுவரையில் 21 தமிழ் ஒருமொழி, இருமொழி அகராதிகள் தொகுக்கப்பட்டிருக்கின்றன.

2005 ஆம் ஆண்டில் யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம் ஈழத்துத் தமிழ்ச் சிறப்புச் சொற்கள் எனும் அகராதியை வெளியிட்டிருக்கின்றது. இந்நாள்களில் இலங்கை அரசின் அரசகரும மொழித்துறையும் தமிழ்அகராதி எனும் பெயர்களில் ஈழத்துத் தமிழ்ச்சொற்களை வெளியிட்டு வருகின்றது. பிரான்சிலும் பிரெஞ்சுஇலங்கைத்தமிழ் அகராதியும் 1997இல் தொகுக்கப்பட்டிருக்கிறது.

**ஏவறை** (து) n : ஏப்பம்(தமிழ்ப்பேரகராதி) J-jaffna

**கதிரை** பெ.:நாற்காலி (இலங். வ.) ( பெருஞ்சொல்லகராதி )

**நாக்கு வழி** வி, : ( இலங்.) (ஒருவரை) இழிவாக விமர்சித்தல் ( க்ரியா )

**கறி** : இந்தியத் தமிழில் இறைச்சியைக் குறிக்கும், ஆனால் ஈழத்தமிழில் காய்கறி அல்லது இறைச்சியால் ஆன குழம்பைக் குறிக்கிறது. ( க்ரியா )

**பாண்** : ஈழத்தமிழில் பாண் எனப்படுவது இந்தியத் தமிழில் ரொட்டி எனப்படுகிறது. ஈழத்தமிழில் ரொட்டி எனப்படுவது இந்தியத்தமிழில் சப்பாத்தி எனப்படுகிறது. பாண் என்பது போர்த்துக்கீசியச் சொல் ஆகும்.

**கதைத்தல்** : இந்தியத்தமிழில் பேசுதல் எனப்படுவது ஈழத்தமிழில் கதைத்தல் எனப்படுகிறது.

## தமிழ் நிலத்திற்கு வெளியே அகராதிகளில் தமிழ்ப்பண்பாடு

தமிழ் அகராதியியல் இந்தியாவுக்கு வெளியே இலங்கை, சிங்கப்பூர், மலேசியா, பர்மா ஆகிய நாடுகளிலும் வளர்ந்து வந்திருக்கிறது. ஈழத்தின் வடபகுதியில் அகராதிகள் பல தொகுக்கப்பெற்றுள்ளன. 1980களில் ஐரோப்பிய நாடுகளுக்குப் புலம்பெயர்ந்த தமிழர்கள் தாம் வாழும் நாடுகளின் மொழிகளையும் தாய்மொழியான தமிழையும் இணைத்து இருமொழி, மும்மொழி அகராதிகளை உருவாக்கி உள்ளனர். பிரெஞ்சுதமிழ், ஜேர்மன் - தமிழ், டச்சு - தமிழ், நோர்ஸக்; - தமிழ், டேனிஷ் - தமிழ், இத்தாலியன் - தமிழ் என அகராதிகள் தொகுக்கப்பட்டுள்ளன. இந்நாடுகளில் தொகுக்கப்பட்ட அகராதிகளிலும் தமிழ்ப்பண்பாட்டுக் கூறுகள் இடம்பெற்றன

**pain** nm திரளப்பம் (பாண். ரொட்டி) (Dictionnaire: francais - tamoul, S.Sachithanantham - Paris ) nm - ஆண்பால் பெயர்.

**tamoul** nm : தமிழ், தமிழன் (Dictionnaire: francais - tamoul, S.Sachithanantham - Paris ) nm - ஆண்பால் பெயர்.

**tamil** substantive : தமிழ், தமிழன். (Lexin - Ordbok : Norsk - Tamilsk. V. Dayalan. M. Hemachandran - Oslo)

**Tamile** m : தமிழன். (ஜேர்மன் - தமிழ்அகராதி, க. சரவணபவன் - ஜேர்மனி)

**tamilisch** m : தமிழ். (ஜேர்மன் - தமிழ் அகராதி, க. சரவணபவன் - ஜேர்மனி)

ஒவ்வொரு மொழியும் பண்பாட்டுப் பரவுகை, கடன்வாங்கல், மூலச்சொல் போன்றவை காரணமாக இன்னொரு மொழியின் சொற்களைக் கொண்டிருப்பதைக் காணக்கூடியதாக இருக்கிறது. அவ்வாறே தமிழிலும் பிறமொழிச்சொற்கள் வழங்கப்பெறுகின்றன. அதேபோல் பிறமொழிகளிலும் தமிழ்ச்சொற்கள் வழங்கப்பெறுகின்றன.

### ஐரோப்பிய மொழி அகராதிகளில் தமிழ்ப் பண்பாட்டுச் சொற்கள்

| தமிழ் | ஆங்கிலம் | பிரெஞ்சு | ஜெர்மன் | இத்தாலியன் |
|---|---|---|---|---|
| அரிசி | rice | riz | Reis | riso |
| இஞ்சிவேர் | ginger | gingembre | Inkver | zenzero |
| கட்டுமரம் | catamaran | catamaran | catamaran | catamarano |
| கயிறு | coir | coir | Coir | coir |
| கறி | curry | curry | Curri | curry |
| சட்னி | chutney | chutney | Chutney | chutney |
| சந்தனம் | sandal | santal | Sandal | sandal |
| தேக்கு | teak | Teak | teck | teck |
| மாங்காய் | mango | mangue | Mango | mango |
| மிளகுத்தண்ணீர் | mulligatawny | mulligatawny | Mulligatawny | mulligatawny |

Hobson - Jobson The Anglo - Indian Dictionary

இன்னும் தற்காலப் பிரெஞ்சு அகராதிகளில் குழம்பு, வெட்டிவேர், பறையா (paria), சமோசா, பூஜை, காமசூத்திரா என்கிற சொற்கள் காணப்படுகின்றன. பெருஞ்சொல்லகராதியில் சொல் தேர்விலும் சொற்பொருள் விளக்கத்திலும் தமிழ்ப்பண்பாடு வெளிப்படுவதைக் காணலாம். க்ரியாவின் தற்கால அகராதியிலும் அகராதியியல் நெறிகளையும் தமிழ்ப்பண்பாட்டையும் அவதானிக்கலாம்.

அகராதிகள் என்பன மொழிகளின் பண்பாட்டு விளைபொருள்களாகத் திகழுகின்றன. தொடக்கநிலையில் மதநோக்கத்திற்காக இயற்றப்பெற்ற அருஞ்சொல்லடைவுகள், சொல்லகராதிகள் காலப்போக்கில் பண்பாடு, இலக்கியம், அரசியல், கல்வி ஆகியவற்றின் வளர்ச்சிகளில் பங்கெடுத்துப் பெரும் அகராதிகளாக பரிணாமம் பெற்றிருக்கின்றன. இப்பரிணாமம் தமிழ்மொழி அகராதிகளுக்கும் பொருந்தும்.

.................................................................................................................................................................

# அகரமுதலி இயக்ககம் சார்பில்
# சொற்குவை மாணவத் தூதுவர் பயிற்சித் திட்டம்
# வாணியம்பாடி இசுலாமியாக் கல்லூரியில் நடைபெற்றது





தமிழ்நாடு அரசு, தமிழ்வளர்ச்சித்துறை, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் மற்றும் வாணியம்பாடிஇசுலாமியாக் கல்லூரித் தமிழ்த்துறை இணைந்து நடத்திய “சொற்குவை“ மாணவத் தூதுவர் பயிற்சித் திட்டம் 2022 நிகழ்வு 05.03.2022ஆம் நாள் சிறப்புற நடைபெற்றது. நிகழ்வில் கல்லூரி முதல்வர் முனைவர் டி. முகமது இல்யாஸ் தலைமை வகிக்க, செயலர் திரு எல். எம். முனீர் அகமது முன்னிலை வகித்தார். தமிழ்த்துறைத் தலைவர் தமிழ்ச்செம்மல் முனைவர் ப.சிவராஜிவரவேற்புரை வழங்க அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் வாழ்த்துரை வழங்கினார்.நிகழ்வில், திருப்பத்தூர் தமிழ் வளர்ச்சி மன்ற நிறுவனர் தமிழ்ச்செம்மல் முனைவர் இரத்தின நடராசன், கல்லூரியின் மேனாள் தமிழ்த்துறைத் தலைவர் கவிமாமணி தி. மு. அப்துல் காதர், காரியமங்கலம் அரசு மகளிர் கல்லூரி முதல்வர் முனைவர் சௌ. கீதா, கிருட்டினகிரி அரசு மகளிர் கல்லூரித் தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் கா. சிவகாமி, திருப்பத்தூர் தூய நெஞ்சக் கல்லூரித் தமிழ்த்துறையைச் சேர்ந்த முனைவர் கீ. பார்த்திபராஜா ஆகியோர் வாழ்த்துரை வழங்கி மாணவர்களுக்குப் பயிற்சியளித்தனர். வாணியம்பாடி இசுலாமியாக் கல்லூரித் தமிழ்த்துறை உதவிப் பேராசிரியர் முனைவர் மு. முஜிபுர் ரகுமான் நன்றியுரை கூறினார்.

# பல்புகழ் நிறுத்தபடிமையோன்

## தொல்காப்பியரின் சமயம் தொடர்பான எஸ்.வையாபுரிப்பிள்ளையின் ஆய்வுமீதான ஒருமீள்வாசிப்பு

முனைவர் கனகசபை இரகுபரன்
பேராசிரியர்,மொழித்துறை,
தென்கிழக்குப் பல்கலைக்கழகம், இலங்கை



இலக்கணம் என்ற சொல், பொதுவாக ஒருமொழியின் இயல்புகளை எடுத்துரைக்கும் நூல்களையே குறிப்பதாகும். தமிழைப் பொறுத்தவரையில், மொழியின் இயல்புகளை மாத்திரமன்றி, அம்மொழியால் ஆக்கப்பட்ட இலக்கியங்களின் பேசுபொருள், அந்த இலக்கியங்கள் இயற்றப்பட்ட யாப்பு, இலக்கியங்களிற் பயின்றுள்ள அணிகள் முதலானவற்றின் இயல்புகளை எடுத்துரைக்கும் நூல்களும் இலக்கணம் எனப்பெறுகின்றன. தக்க இலக்கண ஆசிரியன் ஒருவன், தான் எந்தமொழிக்கு இலக்கணம் எழுதுகிறானோ அந்தமொழியின் இயல்புகளை எடுத்துரைப்பதன்றி தன்னுடைய விருப்புவெறுப்புகளை எடுத்துரைக்கமாட்டான். பொருள், யாப்பு, அணி இலக்கணங்களும் அவ்வாறே. இலக்கியம் கண்டு அதற்கு இலக்கணம் இயம்புவதே முறைமை. அந்த அடிப்படையில் நோக்கும்போது, மொழியிலக்கண நூலொன்றில், குறித்த மொழியின் எழுத்துவழக்கும் பேச்சுவழக்கும் அமைந்துள்ள முறைமை மாத்திரமே எடுத்துரைக்கப்படும். அவ்வாறு எடுத்துரைக்கப்படும்போது அம்மொழியைப் பேசும் சமூகத்தின் சமயம்சார் மொழிவழக்குகள் பற்றியும் விபரிக்கப்படலாம்.[1] ஆனால், இலக்கண ஆசிரியன் தன் சமயவழக்குகளை குறித்தமொழிவழக்கில் அவை பொதுமரபாக இல்லாதநிலையில் எடுத்துரைப்பதற்கு இடம் இல்லை."[2]

மரபுவழிப்பட்ட இலக்கண நூல்களில் நூலின் தொடக்கத்தில் கடவுள்வாழ்த்துப் பாடுவது உண்டு. ஆனால் அதனை நூலின் அங்கமாகக் கொள்வதற்கில்லை. அவ்வாறானவை 'புறவுரை'யாகவே கொள்ளப்படும்.[3] 'தமிழிலே பிற்காலத்திலே தோன்றிய இலக்கண நூல்கள் பலவற்றில் அவ்வாறான கடவுள் வாழ்த்துகள் அமைந்துள்ளன.[4] நூலினுள் ஆங்காங்கே ஏதேனும் வகையில் நூலாசிரியனின் சமயக்கோட்பாடு புலனாவதும் உண்டு. உதாரணமாக எழுத்துக்கு வரைவிலக்கணம் கூறமுற்பட்ட நன்னூலாசிரியர், 'மொழிமுதற் காரணமாம் அணுத்திரளொலி எழுத்து...[5] என்னும்போது, அதில் அவருடைய சமயமான சமணத்தின் அணுக்கோட்பாடும் வெளிப்படுகிறது.'[6] இத்தகையவற்றை இலக்கண நூலொன்றின் பலவீனம் என்றும் கொள்ளலாம்.

இன்றுகிடைக்கும் தமிழ் இலக்கண நூல்களுள் தொன்மையானதான தொல்காப்பியத்தில், அதன் ஆசிரியர், கடவுள் வாழ்த்து என்று ஒன்றை அமைக்கவில்லை. நூலினுள் குறிப்பாக, பொருளதிகாரத்தில் ஆங்காங்கே கடவுளர் பற்றிய செய்திகள் கூறப்பட்டுள்ளன. இலக்கியங்களிற் பயின்றுள்ள அம்சங்கள் என்ற வகையில் எடுத்துரைக்கப்பட்டனவே அல்லாமல் நூலாசிரியரின் சமயச்சார்பினால் உரைக்கப்பட்டவையல்ல. சொல்லதிகாரத்தில் கடவுள் தொடர்பான மொழிவழக்குகள் பற்றிக் கூறப்பட்டவையும் அவ்வாறே. குறிப்பாகக் கூறின் தொல்காப்பியர் தான் படைத்த நூலில் தனது சமயச்சார்பினை வெளிப்படுத்தவில்லை எனலாம். வெளிப்படுத்த விரும்பவில்லை என்றும் கொள்ளலாம். அது தொல்காப்பியத்தின் பலங்களுள் ஒன்று.

தொல்காப்பியர், தனது சமயச்சார்பினை வெளிப்படுத்த முனையாத நிலையில், தொல்காப்பிய உரையாசிரியர்களும் அவரது சமயம் பற்றிய ஆராய்ச்சியில் இறங்கவில்லை. ஆனால், நவீனகாலத்தில் தொல்காப்பியம் பற்றிய ஆராய்ச்சிகளில் தொல்காப்பியரின் சமயம் பற்றிய ஆராய்ச்சியும் முக்கிய இடத்தினைப் பெற்றுவிட்டது. தமிழ்ச் சூழலில், அத்தகு ஆராய்ச்சியில் முனைப்புடன் ஈடுபட்டதோடு, தன் முடிபையே பிற்காலத்து ஆய்வாளர் பலரும் ஏற்கும்படியும் செய்தவர், எஸ். வையாபுரிப் பிள்ளையே.[7] தமக்குமுன் தொல்காப்பியரின் சமயம் பற்றிய ஆராய்ச்சி இருந்த நிலைமைபற்றி அவர் இவ்வாறு கூறுகிறார்."[8]

> தமிழ் மொழிக்குரிய பேரிலக்கணம் வகுத்த தொல்காப்பியர் இன்ன சமயத்தைச் சார்ந்தவரென்று அறிதற்கு முயன்றுள்ளார் ஒருசிலரே ஆவர். 72 ஆண்டுகட்கு முன்னர், 1875ஆம் ஆண்டில் டாக்டர் பர்னல் என்பவர் தாம் எழுதிய 'ஐந்திரம்' என்ற வடமொழி வியாகரணம் என்ற நூலின்கண்ணே தொல்காப்பியர் பௌத்தராகவேனும் ஜைனராகவேனும் இருத்தல் வேண்டுமெனக் கூறிச் சென்றார். ஆனால் அவ்வாறு துணிதற்குத் தாம் கையாண்ட நியாயங்கள் இன்னவென அவர் சுட்டுதல்தானும் செய்யாதொழித்தார். 1914ஆம் வருடத்தில் வெளிவந்த 'தொல்காப்பியர் சரிதவாராய்ச்சி' என்ற ஒருசிறு நூலில் 'இவரது சமயம் சித்தாந்த சைவமேயாகும்' என்னும் முடிபு காணப்படுகின்றது. இதற்குத் தரப்பட்டுள்ள நியாயங்களை இங்கேநான் விசாரிக்கப் புகவில்லை.'[9]

இத்தகுநிலையில், தொல்காப்பியர் சமணரே என்ற கருத்தினை, தான் கண்ட சான்றுகளின் அடிப்படையில் நிறுவமுற்படுகிறார் வையாபுரிப்பிள்ளை. அவரின் அந்த நிறுவுதலை நோக்குவதற்கு முன்னர், தொல்காப்பியரின் காலம் பற்றி அறிந்துகொள்ளுதல் நன்று. தொல்காப்பியரின் காலம் குறித்து அறிஞர் பலரும் வேறுவேறு கருத்துகளை முன்வைத்துள்ளனர். எனினும் இங்கு வையாபுரிப்பிள்ளையின் கருத்தே அவசியமானது. அவர், பல சான்றுகளை முன்வைத்து,

> இங்ஙனமாக எவ்வகையால் நோக்கினும் ஆசிரியர் தொல்காப்பியர் கி.பி.5ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர் எனக் கொள்ளுதலே பொருத்தம் எனத் தோன்றுகிறது."[10]

என்றார். வையாபுரிப்பிள்ளையின் கருத்தின் அடிப்படையில் தொல்காப்பியரை, சங்க இலக்கியம் என்று இன்று சுட்டப்பெறும் எட்டுத்தொகை, பத்துப்பாட்டு ஆகியவற்றுள் அடங்கியுள்ள செய்யுள்கள் தோன்றிய காலத்தின் பின்பும் சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகிய காவியங்கள் தோன்றுவதற்கு முன்பும் வாழ்ந்தவர் என்று கொள்ளலாம். இனி, தொல்காப்பியர் சமணர் என்ற கருத்தை வையாபுரிப்பிள்ளை எவ்வாறு நிறுவுகிறார் என்பதை நோக்குவோம்.

தொல்காப்பியரின் சகபாடிகளுள் ஒருவரான பனம்பாரனார் என்பவர் வழங்கிய சிறப்புப்பாயிரத்தில் பல்புகழ் நிறுத்தபடிமையோன்' என்ற தொடரால் தொல்காப்பியர் சுட்டப்பெறுவதைப் பிரதான ஆதாரமாகக் கொண்டே, வையாபுரிப்பிள்ளை தொல்காப்பியரைச் சமணராக இனங்கண்டார். தொல்காப்பிய உரையாசிரியர்களுள் காலத்தால் மூத்தவரும் சமணருமான இளம்பூரணர், 'பல்புகழ் நிறுத்தபடிமையோன்' என்ற தொடருக்கு, 'தவவொழுக்கத்தினையுடையான்' என்றுபொருள் கொண்டார்.[11] எனினும் எந்தச் சமயம் சார்ந்த தவவொழுக்கம் என்று அவர் கூறவில்லை.

படிமை என்ற சொல்லுக்கு நிகரான மாற்றுவடிவச் சொற்களாக படிவம், படிமம் என்பனவும் தமிழில் வழங்குகின்றன. அச்சொற்கள் பலபொருளில் வழங்கியுள்ளன. பிரதிமை(Image) திருஷ்டாந்தம் (Example / Model வடிவம் (Form / Shape), வழிபடுதெய்வம் (Tutelary deity), தவவேடம் (Guise of an ascetic), விரதம் (Penance / austerities), தூய்மை (Purity) ஆகியவை குறிப்பிடத்தக்கவை."[12]

'படிமை' என்றசொல்லின் மூலத்தை ஆராய்ந்த வையாபுரிப்பிள்ளை, அது பிராகிருதத்திலிருந்து வந்து தமிழிற் கலந்தசொல் எனக்கொண்டார். 'படிமை' என்ற சொல்லைப் பிராகிருதத்திற் காணுவோமாயின் அது வியப்புக்கிடமாகாது. ஆனால் இச் சொல்லினது உருவம் ஈற்றில் சிறிது மாறுபட்டிருத்தல் வேண்டுமென எளிதின் உணரலாம். பாலை என்பது 'பாலா' என்பதன் தமிழ் உருவம்; மாலை என்பது 'மாலா' என்பதன் தமிழ் உருவம். இவைபோன்றேபடிமை என்பது 'படிமா' என்பதன் தமிழ் உருவமாதல் வேண்டும்." [13]

படிமை என்ற சொல்லுக்கு, இளம்பூரணர் கூறியதுபோல 'தவவொழுக்கம்' என்று பொருள் காணமுயன்ற வையாபுரிப்பிள்ளை, தனது ஆராய்ச்சி முயற்சியினையும் அதன் பயனாகத் தான் கொண்ட முடிபினையும் இவ்வாறு விவரிக்கிறார்:

> நமது வைதிக சமய நூல்களில் 'படிமா' என்ற பிராகிருதமேனும் அல்லது அதற்குச் சமமான வடசொல்லேனும் 'தவவொழுக்கம்' என்றதனை உணர்த்துவதாய்ப் பயின்றுவரவில்லை என்பது தெளிந்துகொண்டேன்.
>
> இவ்வாறிருக்க சிலகாலத்துக்கு முன்னர் ஜைன சமயத்தை விளக்கும் ஆங்கில நூலொன்றை (The Heart of Jainism by mrs. Sinclair Strevenson) யான் படிக்கநேர்ந்தது. அதன்கண் 'படிமா' என்ற பிரகிருதச் சொல் மேற்குறித்தபொருளை உணர்த்துவதாகக் காணப்பட்டது.
>
> மோக்ஷம் என்பதற்குரிய மார்க்கத்தில் பதினான்கு நிலைகள் உள்ளனவாக ஜைன சமயத்தவர்கள் கருதுகிறார்கள். இந்நிலைகளைக் குணஸ் தானங்களென்று கூறுவர். இவற்றுள் முதலைந்து நிலைகளும் இல்லறத்தோர் துறவறத்தோர் என்ற இரு திறத்தார்க்கும் பொதுப்பட உரியன. ஆறு முதல் ஏனைய நிலைகள் துறவறத்தோர்க்கு மட்டும் உரியன. இல்லறத்தில் நிற்பார், முதலைந்து நிலைகளும் கைவரப்பெற்ற பின்னர், உண்மைத் தீர்த்தங்கரர்மாட்டும் உண்மையாச்சாரியர்மாட்டும் உண்மை நூலின் மாட்டும் துளங்காத பக்திவைத்து, பஞ்ச அதிசாரங்களையும் நீத்துப் பன்னிரண்டு விரதங்களையும் அனுஷ்டித்தல் வேண்டும், இங்ஙனம் நின்றோரினும் சிறந்து மேம்பட்டநிலை எய்தவிரும்பும் இல்லறத்தோர் பதினொரு தவங்களை மேற்கொள்வர். இவ் ஒழுக்கங்கள் 'படிமா' என்று பிராகிருதத்திற் பெயர்பெறும். 'தவம்' என்ற சொல் இல்லறத்தார்க்கும் உரியதாதல் 'நற்றவஞ் செய்வார்க்கிடம் தவஞ்செய்வார்க்கும் அஃதிடம்' (சீவகசிந். 77) என்றமேற்கோள் நோக்கி உணரலாகும்.
>
> இதனால் 'படிமை' என்பது ஜைனசமய வழக்குச் சொல் என்பதும் அச்சொல் 'தவவொழுக்கம்' என்றதனை உணர்த்துதல் அவ்வொரு சமயநூலின் கண் அன்றிப் பிறசமய நூல்களில் இல்லை என்பதும் தெளியக்கிடக்கின்றன.
>
> ஆகவே 'பல்புகழ் நிறுத்தபடிமையோன்' என்று சிறப்பிக்கப்பெற்ற தொல்காப்பியனார் ஜைன சமயத்தவராவரென்பதும், அதன்கண் இல்லறநெறிநின்று சிறந்த தவவொழுக்கங்களை மேற்கொண்டவராவர் என்பதும் உணரலாம்.'[14]

வையாபுரிப்பிள்ளை, தொல்காப்பியரின் சமயம் பற்றிய இக்கட்டுரையை 1920 காலப்பகுதியில் "செந்தமிழ்" பத்திரிகையின் சில இதழ்களில் தொடர்ச்சியாக எழுதினார். அப்பத்திரிகையின்

ஆசிரியராக இருந்த நாராயணையங்கார், சுன்னாகம் இராமநாதன் கல்லூரியில் தலைமைத் தமிழ்ப் பண்டிதராக இருந்த நவநீதகிருஷ்ணபாரதி ஆகியோர் கண்டனவுரைகளை எழுதியிருந்தனர். வையாபுரிப்பிள்ளை "அவைகுறித்துப் பின்னர்யான் எழுதுவேன்"15என்று குறித்தாராயினும் அவை தொடர்பாக பின்னர் ஒருபோதும் எழுதியதாகத் தெரியவில்லை. வையாபுரிப்பிள்ளை தான், தொல்காப்பியர் பற்றிய இந்த ஆராய்ச்சியை மேற்கொள்வதற்குச் சில ஆண்டுகள் முன்பாக (1914 இல்) வெளிவந்த 'தொல்காப்பியர் சரிதவாராய்ச்சி' என்ற நூல், தொல்காப்பியரைச் சித்தாந்த சைவராக நிறுவமுற்பட்டதைக் குறிப்பிட்டபோதிலும், "இதற்குத் தரப்பட்ட நியாயங்களை நான் விசாரிக்கப் புகவில்லை" என்று அக் கருத்தைப் புறந்தள்ளியமையும் இங்குக் கருதத்தக்கது. தொல்காப்பியர் காலத்துக்குப் பல நூற்றாண்டுகள் பின்னர் எழுந்த சித்தாந்த சைவத்தோடு அவரைத் தொடர்புபடுத்துவது வரலாற்றுக்கு முரணானது என்ற எண்ணம் காரணமாக அதனைப் பற்றி விசாரியாதே புறக்கணித்தமையில் ஒருவேளை நியாயம் இருக்கலாம். ஆனால், நாராயணையங்கார், நவநீதகிருஷ்ணபாரதி ஆகிய இருவரது மறுப்புரைகளிலும் கருத்திற்கொள்ளவேண்டிய பலவிடயங்கள் இருக்கவும் வையாபுரிப்பிள்ளை அவைபற்றி எதுவும் பேசாது தவிர்த்தமை நியாயமானதல்ல.

நவநீதகிருஷ்ணபாரதி எழுதிய மறுப்புரையின் தலைப்பே 'தொல்காப்பியர் சைனராம்' என்று ஏளனத் தொனியோடு அமைந்தது. பதிற்றுப்பத்தில், இரும்பொறை என்ற மன்னனின் வைதிக நெறிப்பட்ட தன்மையை விதந்துரைப்பதாக அமைந்த ஒருபாடல் 'படிமை' என்ற சொல்லால் அவனது தவவேடத்தைக் குறிப்பிடுகிறது. அதன் அடிப்படையில் நவநீதகிருஷ்ணபாரதி,

'வேதத்தையும் வேள்வியையும் மிகப் போற்றிவந்த இரும்பொறை என்பானையும் 'கூறினைபெரும் நின் படிமையானே' எனச்
சான்றோர் சிறப்பித்ததுகொண்டு சைனனாகப் பிள்ளையவர்கள் கோடல் வேண்டும். பரிமேலழகர், நச்சினார்க்கினியாரையும் அங்ஙனமே கோடல் பிள்ளையவர்களுக்கு இனி ஆவசியமாகும். [16]
என்று ஏளனம் கொப்புளிக்க எழுதினார்.

நவநீதகிருஷ்ணபாரதியின் கருத்தைவழிமொழிந்து ஆனால் அந்த ஏளனத்தொனி அற்றவகையிலே, நிதானத்தோடு நாராயணையங்கார் மேல்வருமாறு எழுதினார்.

'படிமை என்பது சைவசமயத் தவவொழுக்கத்துக்கு மட்டும் சிறப்புப் பெயராகாது வைதிகசமயத் தவவொழுக்கத்துக்குமுரிய பெயராமென்று, பதிற்றுப்பத்தின் (74) 'கேள்விகேட்டுப் படிவமொழியாது, வேள்வி வேட்டனை யுயர்ந்தோருவப்ப....கூறினை பெருமநின் படிமையானே' என்றபாடலில் படிமையென்றது வைதிக சமயத் தவவொழுக்கத்தையுணர்த்தியிருப்பதைக் குறிப்பாய் எடுத்துக்காட்டி ஸ்ரீமத் நவநீதகிருஷ்ணபாரதியார் மறுத்துரைத்திருப்பது பொருத்தமுடையதே.' [17]

நாராயணையங்கார், குறித்த பதிற்றுப்பத்துப் பாடலின்-நவநீதகிருஷ்ணபாரதி எடுத்துக்காட்டாத தொடக்கப்பகுதியையும் காட்டியிருப்பது முக்கியமானதாகும். ஏனெனில் அத்தொடக்கப்பகுதியில் இரும்பொறையின் வைதிகச்சார்பு வெளிப்படையாகவே உணர்த்தப்படுவதோடு 'படிமை' என்பதும் 'தவம்' என்ற பொருளில் வழங்கப்பட்டுள்ளது. 'படிவம் ஒழியாது' என்ற தொடர் 'தவஒழுக்கத்தில் நீங்காது' என்று அங்குப் பொருள்தருகிறது.

தொல்காப்பியரைச் சுட்டுவதற்குப் பனம்பாரனாரால் பயன்படுத்தப்பட்ட 'படிமையோன்' என்ற சொல்லில் அச்சொல்லின் பகுதியாக அமைந்துள்ளதும் தவவேடம் என்ற பொருளைத் தருவதுமான 'படிமை' என்ற சொல், சமணச்சார்பினை மாத்திரம் உடையதல்ல என்பதை நவநீதகிருஷ்ணபாரதியும் நாராயணையங்காரும் பதிற்றுப்பத்துச் சான்று ஒன்றின் மூலம் தெளிவாக நிறுவினராயினும் அச்சொல் சமணச்சார்பினை மாத்திரம் உடையதல்ல என்பதைவிட வைதிகச் சார்பினை உடையதாகவே தமிழிற் பொருமளவிற் பயின்றுள்ளது என்பதை நிறுவுவதற்கு ஏற்றனவான பலசான்றுகள், பழந்தமிழ் இலக்கியங்களிலே காணக்கிடக்கின்றன என்பதை இங்கு வலியுறுத்துதல் வேண்டும்.

குறுந்தொகைச் செய்யுள் ஒன்று முதலில் நோக்கத்தக்கது. தலைவியைப் பிரியநேர்ந்ததால் வருந்தும் தலைவன், தன் நண்பனான பார்ப்பன இளைஞன் ஒருவனைப் பார்த்து வினவும் பாங்கில் அமைவது அச்செய்யுள். 'எழுதப்படாது செவிவழியாகவே பேணப்பெறும் கற்பினை உடைய நின் வேதத்திலே பிரிந்தவர்களைச் சேர்த்து வைப்பதற்கான மருந்தும் உள்ளதோ? என்று வினவுகிறான் தலைவன். பார்ப்பன நண்பனை விளிக்கும்போது அவனது பிரமச்சரிய விரதகோலமும் நடத்தையும் புலப்படும் வகையிலே விளிக்கிறான்.

"பார்ப்பன மகனே பார்ப்பன மகனே
செம்பூ முருக்கின் நல்நார் களைந்து
தண்டொடு பிடித்த தாழ் கமண்டலத்துப்
படிவ உண்டிப் பார்ப்பன மகனே;
எழுதாக் கற்பின் நின் சொல்லுள்ளும்
பிரிந்தோர்ப் புணர்க்கும் பண்பின்
மருந்தும் உண்டோ? மயலோ இதுவே!"18

இங்கு 'படிவஉண்டி' என்ற தொடரே கவனிக்கப்பட வேண்டியது. 'விரத உணவு' என்பது அதன் பொருள். பிரமச்சரிய விரதம் பேணுவோன், பிறர் இல்லங்களுக்குச் சென்று இரந்துண்ணும் முறைமையினை அது உணர்த்துகிறது. பார்ப்பனப் பிரமச்சாரிகள், இவ்வாறு இரந்துண்ணும் முறைமை சங்கச் செய்யுள்கள் பிறவற்றிலும் விவரிக்கப்படுதல் அறியத்தக்கது."[19]

பார்ப்பன மகனை விளித்துப் பேசுவதாக அமைந்த மேற்படி குறுந்தொகைச் செய்யுளிற் கூறப்படுவதுபோலவே கலித்தொகைச் செய்யுள் ஒன்றிலும் ஒரு கூற்றுவருகிறது. அது தோழி கூற்று. பிரிவுணர்த்திய தலைமகனிடம் தோழி கேட்கிறாள்: ஒளிவீசும் மதிபோல விளங்கும் தலைவியின் முகம் நீ பிரிந்தால், பாம்பு (கிரகணம்) பற்றிய மதிபோல ஒளியிழந்துவிடும். பொய்யற்ற கேள்வி (பாடம் கேட்டல்) காரணமாகப் பெரியவர்களை அடைந்து, அவர்களிடம் கற்றுக் கொண்ட குற்றமற்ற விரதத்தினாலே, அந்த ஒளியை மீட்டுத்தர முடியுமா?

"பொய்யற்ற கேள்வியால் புரையோரைப் படர்ந்துநீ
மையற்ற படிவத்தான் மறுத்தரல் ஒவ்வதோ
தீங்கதிர் மதிஏய்க்கும் திருமுகம்; அம்முகம்
பாம்புசேர் மதிபோல, பசப்பூர்ந்து தொலைந்தக்கால்?[20]

இங்கு 'மைஅற்ற படிவம்' என்பது குற்றமற்ற விரதம் என்ற பொருளிலே வந்தது. எனினும் இங்குக் குறிப்பிடப்படுவது வைதிகச் சார்பான விரதமா அவைதிகச் சார்பான விரதமா என்பதில் தெளிவில்லை. ஆனால் இக் கலித்தொகைப் பகுதி, முன்னர்க் காட்டிய குறுந்தொகைச் செய்யுளில் பார்ப்பன மகனைப் பார்த்துத் தலைவன் கூறிய அதே பாங்கில் அமைந்திருப்பதும் இரண்டிலும் படிவம் என்ற சொல் இடம் பெறுவதும் அவதானிக்கத்தக்கன. அதேவேளை 'கல்வி' என்று அல்லாது 'கேள்வி' என்று அமைந்தது செவிவழியாகப் பாடங்கேட்டு ஓதும் வேதமரபினைக் குறித்தது என்று கொள்வதற்கு இடமுள்ளமையும் முற்குறித்த குறுந்தொகைச் செய்யுளில் 'எழுதாக் கற்பின் நின்சொல்' எனவந்ததும் உடன் நோக்கத்தக்கன.

விரதம், தவம் என்பது தனியே ஆண்களுக்கு மாத்திரம் உரியதாக இருந்ததில்லை; பெண்களுக்கும் குறிப்பாக வைதிகப் பெண்களுக்கும் உரியதாக இருந்தது; துறவுசார்ந்துமட்டும் அல்லாது உலகியல் இன்பங்களுக்காகவும் இருந்தது. ஒருபெண் தான் விரும்பிய ஆண்மகனை அடைய வேண்டும் என்று விரதம் இருக்கிறாள் என்றால் அந்தவிரதம் துறவுசார்ந்ததாக அதாவது அவைதிகம் சார்ந்ததாக இருக்க இடமில்லை. அத்தகைய விரதங்களுள் ஒன்றாகிய தைந்நீராடல் (பாவைநோன்பு) மரபினைப் பரிபாலிடற் பரக்கக் காணலாம். அது 'தவத் தைந்நீர்ஆடுதல்'[21] எனப்பட்டது.

அகநானூற்றுச் செய்யுள் ஒன்று, பெண்ணொருத்தி பொருள்வயிற் பிரிந்த கணவன் விரைந்து வந்துவிடவேண்டும் என்ற வேண்டுதலோடு கை கூப்பியபடி தனியே பகலே துணையாக வருந்திருப்பதைச் சித்திரிக்கிறது. கணவனது வருகைக்காக நோற்கும் அவளுடைய நெஞ்சம் 'படிவநெஞ்சம்' எனப்படுகிறது.

"தொடி அணிந்த முன்கைத் தொகுவிரல் குவைஇ
படிவநெஞ்சமொடுபகல் துணையாக
நோம்கொல்,அளியள் தானே........"[22]

பரிபாடலின் வைதிகச் சார்பு வெளிப்படையானது. பரிபாடல் ஒன்றில், முருகனது திருவடியை அடையும் தகுதியற்றவர்களுள் ஒருசாராக அழிதவப்படிவத்து அயரியோர்"[23](பொய்த்தவவேடம் கொண்டோர்) குறிப்பிடப் படுகிறார்கள். முல்லைப்பாட்டிலே "கல்தோய்த்து உடுத்த படிவப் பார்ப்பான்"[24] குறிப்பிடப்படுகிறான். ஆடையை காவிக்கல்லில் தோய்த்துத் துவராடை(காவியுடை) யாக ஆக்கி உடுக்கும் பார்ப்பனனின் தவக்கோலமே இங்கு விவரிக்கப்படுகிறது.

இதுவரை நோக்கிய மேற்கோள்களால், படிமம், படிமை, படிவம் என்றசொல் சங்கச் செய்யுள்களில் பெரும்பான்மையும் வைதிகச்சார்போடே பயின்று வந்தது என்பது உறுதியாகிறது. இவையாவும் தொல்காப்பியருக்கு முந்திய வழக்குகள். இனி, தொல்காப்பியர் காலத்தை ஒட்டி, சற்றுப் பிந்தியனவாகக் கருதப்பெறும் நூல்களை நோக்குவது பொருத்தமானது.

திருக்குறளையோ சிலப்பதிகாரத்தையோ அவை இன்ன சமயச் சார்பான நூல்கள் என்று ஆணித்தரமாகக் கூறுவது இலகுவானதல்ல. ஆனால் மணிமேகலை பௌத்த நூல் என்பதும் வைதிகமார்க்கத்துக்கு எதிரானது என்பதும் வெளிப்படை. ஆயினும் அந்நூலிலும் தவம் என்று பொருள் தருவதான படிமம் என்ற சொல் வைதிகச் சார்புடனேயே கையாளப்பட்டுள்ளது. சுதமதி என்ற பெண்பாத்திரம், அந்தணனாகிய தன் தந்தை பற்றி விவரிக்குமிடத்து,

"பார்ப்பனமுதுமகன் படிம உண்டியன்
மழைவளம் தரூஉம் அழலோம்பாளன்"[25]

என்று அறிமுகப்படுத்துகிறாள். இங்குப் படிம உண்டியன் என்ற தொடர் விரத உணவினன், விரதம் காரணமாகப் பட்டினி கிடந்துஉண்பவன் என்னும் பொருளில் வந்துள்ளது.

இவற்றை நோக்கும்போது, தொல்காப்பியர் கூறிய இலக்கணத்துக்கு இலக்கியமாக எடுத்துக்கொண்ட பழந்தமிழ் இலக்கியங்கள் முதல், அவர் காலத்துக்குப் பின்னர் எழுந்த மணிமேகலை வரையில், தவம், தவவேடம் என்றபொருளிலான படிமம், படிமை, படிவம் என்ற சொல், பெரும்பாலும் வைதிகச் சார்புடனேயே வழங்கியுள்ளது என்பது தெளிவாகிறது. இதற்கு மேலாக முந்து இலக்கியங்களில் விவரிக்கப்படும் பார்ப்பனரின் படிமக்கோலத்திற் புலனாகும் முப்புரிநூல், கமண்டலம், முக்கோல் முதலானவற்றை அந்தணரின் அடையாளங்களாகத் தொல்காப்பியர், தனது நூலிலும் வெளிப்படுத்தியுள்ளார்.

"நூலேகரகம் முக்கோல் மனையே
ஆயுங் காலைஅந்தணர்க்கு உரிய"[26]

மறுதலையாக அவைதிகத் துறவிகள் பற்றி, தொல்காப்பியத்தில் எங்கேனும் விவரிக்கப்படவில்லை என்பதும் மனங்கொள்ளவேண்டியது. தொல்காப்பியர் காலத்தை ஒட்டிய தமிழிலக்கியப் பரப்பில் படிமம், படிமை, படிவம் என்ற சொல் வழக்குகள் இந்த அளவுக்கு வைதிகச் சார்புடையனவாக இருக்க, வையாபுரிப்பிள்ளை அவற்றுள் எதனையும் நோக்காது நவநீதகிருஷ்ணபாரதி, நாராயணையங்கார் ஆகியோர் தமது மறுப்புரையில் எடுத்துக்காட்டிய பதிற்றுப்பத்து வழக்கு ஒன்றையேனும் பொருட்படுத்தாது எங்கோ ஒருவர் ஆங்கிலத்தில் ஜைனசமயம் பற்றி எழுதிய நூலில் வரும் ஒரு தகவலை மாத்திரம் வைத்துக்கொண்டு 'படிமை' என்ற சொல் சமணச் சார்பானது. ஆகையால் 'படிமையோன்' எனப்பட்ட தொல்காப்பியர் சமணர் என்ற முடிவுக்கு வருவது அபத்தமானது.

வையாபுரிப்பிள்ளை, தொல்காப்பியர் பற்றிய இந்த ஆராய்ச்சியைத் தனது முப்பது வயதுக்குள்ளாகவே மேற்கொண்டார். அப்போது அவர் பல்கலைக்கழக ஆசிரியப் பணியில் இணையவில்லை; வழக்கறிஞராகத் தொழில் பார்த்துவந்தார். பிற்காலத்தில் பல்கலைக்கழகங்களில் தமிழாசிரியராகவும் தமிழாராய்ச்சியாளராகவும் விளங்கினார். பழந்தமிழ் நூல்களைச் செம்மையான முறையிற் பதிப்பித்ததும், ஆராய்ச்சி நுட்பங்களோடு சென்னைப் பல்கலைக் கழகத்துத் தமிழ்ப் பேரகராதியை(Tamil Lexicon) தயாரித்ததும் அவரது தமிழ்ப் பணிகளுள் தலையானவை. வையாபுரிப்பிள்ளையின் சங்க இலக்கியப் பயிற்சி சிறப்பானது. சைவசித்தாந்த மகாசமாஜம், சங்கச் செய்யுள்கள் முழுவதையும் புதிய அணுகுமுறையில் வகைதொகைப்படுத்தி வெளியிடும் முயற்சியில் ஈடுபட்டபோது, அதற்கு முழுமையான பங்களிப்பினை நல்கியவர் வையாபுரிப்பிள்ளையே. அந்த வெளியீட்டின் முடிவுரையில் சமாஜத்தின் அப்போதைய காரியதரிசி மா.பாலசுப்பிரமணியன், வையாபுரிப்பிள்ளையின் பங்களிப்பினை இவ்வாறு மெச்சுகிறார்:

"சென்னைப் பல்கலைக்கழகத் தலைமைத் தமிழாசிரியரும், ஏட்டுப் பிரதிகளைப் பரிசோதிப்பதில் சிறந்த நிபுணரும், சங்க இலக்கியங்களில் முப்பதுவருட காலமாகப் பயிற்சியுடையவரும் சமாஜ வெளியீடுகள் பலவற்றுக்குப் பிரதிகளைச் சேகரித்து ஒப்புநோக்கிப் பலவழிகளிலும் துணைபுரிந்தவரும் எனது நண்பருமாகிய சைவத்திருவாளர் ராவ்சாஹிப் எஸ். வையாபுரிப்பிள்ளையவர்கள் இவ்வெளியீட்டுக்காக இயற்றியதொண்டு அளவிடற்பாலதன்று. இப்பதிப்புக்கு இவரே பதிப்பாசிரியர் என்று சொல்லக்கூடிய அளவிற் பேருதவி செய்துள்ளார்கள்."[27]

அந்த உண்மையை உணர்ந்த இன்றைய தமிழாய்வுலகம் 'சங்க இலக்கியம் முழுவதும் பாட்டும் தொகையும்' என்ற அந்தப் பதிப்பை வையாபுரிப்பிள்ளை பதிப்பாகவே கொள்ளுகிறது. சங்க இலக்கியங்களில் இவ்வளவு தாடனம் பயிற்சி உள்ள வையாபுரிப்பிள்ளை, அவற்றில் ஆங்காங்கே பயின்றுவந்துள்ள படிமம், படிமை, படிவம் என்ற சொல்லின் வைதிகச் சார்பினைக் காணாது விடுத்தமை முரண்நகையே.

வையாபுரிப்பிள்ளையின் தமிழ்ப் பணிகளுள் விதந்துபோற்றப்படுவது அவரது அகராதிப் பணியாகும். நெறிமுறைப்பட்டதான அகராதியியலைக் கோட்பாடு ரீதியாகவும் செயல் முறையாகவும் தமிழ்ச் சூழலுக்கு அறிமுகப்படுத்தியவர் அவரே. அகராதி ஆக்கக்குழுவின் தலைவராகவிருந்த அவர், உருவாக்கிய தமிழ்ப் பேரகராதியின் நான்காம் தொகுதியில் படிமம், படிமை, படிவம் ஆகிய சொற்கள் தரப்பட்டுள்ளன; அச்சொற்கள் உணர்த்தும் வேறுவேறு பொருள்களும் தரப்பட்டுள்ளன. அவற்றுள் தவவேடம், விரதம் ஆகிய பொருள்களுக்கு எடுத்துக்காட்டாக, 'கற்றோய்த் துடுத்த படிவப் பார்ப்பான்' (முல்லைப்பாட்டு 37) முதலானசங்க இலக்கியத் தொடர்கள் தரப்பட்டுள்ளன. படிமம், படிமை, படிவம் ஆகிய சொற்கள் தவிர, அவற்றோடு தொடர்புடைய தொடர்கள் சிலவும் இடம் பெற்றுள்ளன. அவற்றுள் ஒன்று 'படிமவுண்டி என்பது. அதற்கு எடுத்துக்காட்டாக 'பார்ப்பன முதுமகன் படிமவுண்டியன்' (மணிமேகலை5:33) என்ற தொடர் தரப்பட்டுள்ளது. 'படிவவுண்டி' என்ற தொடரைத் தந்து அதற்கு எடுத்துக்காட்டாக 'படிவவுண்டிப் பார்ப்பனமகனே' என்ற குறுந்தொகைத் தொடர் தரப்பட்டுள்ளது. எனவே குறித்த அகராதியின் தலைமை ஆசிரியராக விளங்கிய வையாபுரிப்பிள்ளை படிமம், படிமை, படிவம் ஆகிய சொற்களும் அவற்றோடு தொடர்புபட்ட, தொடர்களும் கொண்டிருந்த வைதிகச் சார்பான வழக்கினை அறியாதிருப்பதற்குச் சாத்தியம் இல்லை. அவ்வாறாக அறிந்தநிலையிலாயினும் பல்லாண்டுகளுக்குமுன் (1920இல்), "படிமை என்பது ஜைன சமயவழக்குச் சொல் என்பதும் அச்சொல் 'தவவொழுக்கம்' என்றதனை உணர்த்துதல் அவ்வொரு நூலிலன்றிப் பிறசமய நூல்களில் இல்லை என்பதும் தெளியக்கிடக்கின்றன."[28] என்று அழுத்தந்திருத்தமாகத் தான் முன்வைத்த கருத்தினை வையாபுரிப்பிள்ளை மாற்றமுயலவில்லை.

ஆய்வு நெறிமுறைகளில் வையாபுரிப்பிள்ளை காட்டிய விசுவாசம் உலகறிந்தது.

"எந்த ஆராய்ச்சியாளனும் அறிவியல் பூர்வமான வரலாற்றுத் தகவல்களைக் கணக்கெடுக்கத் தவறும் ஒருநிலையை இல்லாததாக்கினார். அவரைப் பொறுத்தவரையில் ஆதாரமில்லாத எடுகோள்களுக்கும் உணர்ச்சிவசப்பட்ட முடிவுகளுக்கும் இடமிருக்கவில்லை. முற்றுமுழுக்கச் சான்றுகளின் அடிப்படையிலேயே அவர் தனது முடிவுகளை எடுத்துக் கூறினார்."[29]

என்றவாறான பாராட்டுகளைத் தனக்கு

உரியனவாக்கிக்கொண்ட வையாபுரிப்பிள்ளை, படிமை என்ற சொல்லின் வைதிகச் சார்புக்கான இத்தனை சான்றுகளைக் கண்டநிலையிலும் ஏன் தன் முடிவை மாற்றாதிருந்தார்? அதற்கான காரணம் உளவியற்சார்பானதுபோலும். வையாபுரிப்பிள்ளை, நிதானமான ஆய்வாளர்களால் நன்கு மதிக்கப்பட்டபோதிலும் தமிழ் நூல்களின் காலத்தைப் பின்தள்ளிநோக்கியமை, வடமொழிச் சான்றுகளுக்கு அதீத முக்கியத்துவம் கொடுத்தமை முதலான காரணங்களால் ஒருகாலக்கட்டத்தில் தமிழுணர்ச்சியாளர்களால் தூற்றப்பட்டார்.

வையாபுரிப்பிள்ளையின் மறைவு குறித்துவந்த இரங்கலுரைகளை நோக்கும்பொழுது, குறிப்பாக தெ.பொ. மீனாட்சிசுந்தரனார் எழுதியுள்ளதைப் பார்க்கும்பொழுது, மற்றவர்களால் தன் கருத்துகளுக்காகத் தாக்கப்படத் தாக்கப்பட அவர் பொதுவிடயங்களிற் கலந்துகொள்ளாது மேலும் மேலும் ஒதுங்கிக்கொண்டாரென்பது தெளிவாகிறது. அத்தகைய ஒருநிலையில் அவர் சில விதிகளை எவ்வித நெகிழ்ச்சியுமற்ற முறையிலும், ஒருவகையிற் பார்க்கும்பொழுது, பழிவாங்குவதுபோன்றும் பிரயோகிக்கத் தொடங்கினார். அவரது இறுதிக் காலத்தில் அவருடன் பணியாற்றிய வி.ஐ. சுப்பிரமணியம் எடுத்துக்காட்டுவதுபோன்று, இந்தத் தட்டுத் தளர்வுற்ற பிரயோகமுறைமை, ஓர் அறிவியல் வழுவினைத் தன்னகத்தே கொண்டதாகவே இருந்தது." [30]

கட்டுரையின் நிறைவில் வலியுறுத்தவேண்டிய விடயம் ஒன்று உண்டு. தொல்காப்பியர் சமணர் என்ற கருத்தைமறுப்பதோ அன்றேல் அவர் வைதிகமதச் சார்பானவர் என்று நிறைவுறுவதோ இக்கட்டுரையின் நோக்கம் அல்ல. தொல்காப்பியர் சமணர் என்று தான்கொண்ட எடுகோளை நிறுவுவதற்கு வையாபுரிப்பிள்ளை எடுத்தாண்ட சான்று வலுவற்றது என்பதே இங்கு பிரதானமாக வலியுறுத்தப்படுவது.

### சான்றெண் விளக்கம்

1.உதாரணமாக, தொல்காப்பியம் சொல்லதிகாரம் கிளவியாக்கத்தில் வரும்,

பெண்மை சுட்டிய உயர்திணை மருங்கின்
ஆண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவியும்
தெய்வம் சுட்டிய பெயர்நிலைக் கிளவியும்
இவ்வென அறியும் அந்தம் தமக்கு இலவே
(கிளவியாக்கம்4)

காலம் உலகம் உயிரே உடம்பே
பால்வரை தெய்வம் வினையே பூதம்
ஞாயிறு திங்கள் சொல் எனவரூஉம்
ஆயீரைந்தொடு பிறவும் அன்ன
ஆவயின் வரூஉம் கிளவி எல்லாம்
பால்பிரிந்து இசையா உயர்திணைமேன
(கிளவியாக்கம் 57)

நிற்றாங்கு இசைத்தல் இவண் இயல்பின்றே
(கிளவியாக்கம் 50)

இசைத்தலும் உரியவேறு இடத்தான
(கிளவியாக்கம் 59)

முதலான சூத்திரங்கள் இத்தகையன. பார்க்க: தொல்காப்பியம் சொல்லதிகாரம் மூலமும் சேனாவரையர் உரையும். சி.கணேசயர் எழுதிய உரைவிளக்கக் குறிப்புகளுடன் (சுன்னாகம்: திருமகள் அழுத்தகம், 1938) 15,94,96

2 உதாரணமாக 'தொன்னூல் விளக்கம்' என்ற பெயரில் தமிழ் இலக்கணம் எழுதிய, கத்தோலிக்கரான வீரமாமுனிவரால் தன் சமயம்சார் வழக்கு எதனையும் கூற முடியவில்லை. ஆனால் நெடுங்காலமாகத் தமிழ் வழக்கில் இருந்துவரும் சமயமரபுகளை அவர் குறிப்பிடத் தவறவில்லை. அகத்திணை மரபுக்குரிய கருப்பொருள் இலக்கணம் கூறும் நூற்பாக்கள் கவனிக்கத்தக்கன. பார்க்க: ச.வே.சுப்பிரமணியன் (ப.ஆ) தொன்னூல் விளக்கம் (சென்னை: தமிழ்ப்பதிப்பகம், 1978)

3 முகவுரை பதிகம் அணிந்துரை நூன்முகம்
புறவுரை தந்துரை புனைந்துரை பாயிரம்
நன்னூல்: பொதுப்பாயிரம் - 1 பார்க்க : ஆறுமுகநாவலர் (ப.ஆ.) நன்னூல் விருத்தியுரை (சென்னை: வித்தியா நூலான அச்சகம், 1981)13

4. உதாரணம்:

அ. 'பூமலி அசோகின் புனைநிழல் அமர்ந்த
நான்முகன் தொழுதுநன்கு இயம்புவன் எழுத்தே,
இது நன்னூலின் கடவுள்வாழ்த்து; சமணசமயக் கடவுளான அருகனை வாழ்த்துவது.

ஆ. 'மிக்கவன் போதியின் மேதக்கு இருந்தவன் மெய்த்தவத்தால்
தொக்கவன் யார்க்கும் தொடர ஒண்ணாதவன் தூயன் எனத்
தக்கவன் பாதம் தலைமேற் புனைந்து தமிழுரைக்க....'
எனப் புத்த தேவனை வாழ்த்தித் தொடங்குகிறது வீரசோழியத்தின் பாயிரம்.

இ. 'மலைமகள் ஒருபால் மணந்து உலகு அளித்த
தலைவனை வணங்கிச் சாற்றுவன் எழுத்தே'
என்று சிவனை வாழ்த்துவதாக அமைகிறது இலக்கணவிளக்கத்தின் தற்சிறப்புப்பாயிரம்.

5.ஆறுமுகநாவலர்,(முற்குறித்தது)41

6.நன்னூலுக்குச்சைவராகிய சங்கரநமச்சிவாயவர் செய்து சிவஞானசுவாமிகள் திருத்திய விருத்தியுரையில், 'அணுத்திரளொலி' என்பதற்குத் தந்த விளக்கம் வருமாறு:

அநாதிகாரணமாகிய மாயையினை ஈண்டுக் கூறாது, ஆதிகாரணமாகிய செவிப்புலனாம் அணுத்திரளை எழுத்துக்கு முதற்காரணம் என்றார். இவ்வாசிரியர்க்கு மாயை உடன்பாடன்று. அணுத்திரள் ஒன்றுமே துணிவெனிற் பிறிதொடுபடாஅன் தன் மதம் கொளல் என்னும் மதம் படக் கூறினார். என்க. ஆறுமுகநாவலர் (முற்குறித்தது: 42)

7. உதாரணம்:

அ. மாயோன் மேய காடுறை உலகமும்
சேயோன் மேய மைவரை உலகமும்
வேந்தன் மேய தீம்புனல் உலகமும்

வருணண் மேய பெருமணல் உலகமும்
முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் எனச்
சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே.
(தொல்.பொருள்5)

ஆ. மாயோன் மேய மன்பெருஞ் சிறப்பின்
தாவா விழுப்புகழ்ப் பூவை நிலையும்
(தொல்.பொருள் 60) .

8. வையாபுரிப்பிள்ளை தொல்காப்பியரின் சமயம் தொடர்பாக எழுதிய கட்டுரையினை 1920 காலப்பகுதியில் மதுரைத் தமிழ்ச்சங்க வெளியிடான 'செந்தமிழ்' பத்திரிகை (18:9)யில் வெளியிட்டார். அதுபின்னர் 1749இல் வெளிவந்த அவரது 'தமிழ்ச் சுடர்மணிகள்' என்ற கட்டுரைத்தொகுதி நூலில் 'தொல்காப்பியர்' என்ற கட்டுரையின் ஒருபகுதியாக வெளிவந்தது. அந்நூலின் இரண்டாம் பதிப்பு 1952இல் சென்னை பாரதி நிலைய வெளியீடாக வந்தது. இக்கட்டுரைக்கு உசாத்துணையாகப் பயன்படுத்தப்பட்டது அதுவே.

9. எஸ்.வையாபுரிப்பிள்ளை, தமிழ்ச்சுடர்மணிகள் (சென்னை: பாரிநிலையம், 1952), 7

10.(மேற்படி) 38

11. தொல்காப்பியர், இளம்பூரணம், சிறப்புப்பாயிர உரை

12. பார்க்க: Tamil Lexicon i Vol.IV

13. எஸ்.வையாபுரிப்பிள்ளை (முற்குறித்தது)9

14. மேற்படி, 9-11

15. மேற்படி, 11

16. செந்தமிழ் (மதுரை: தமிழ்ச்சங்கம், 2021:19:6) 301

17.மேற்படி,398

18. உ.வே.சாமிநாதையர் (ப.ஆ.) குறுந்தொகை மூலமும் உரையும் (சென்னை: டாக்டர் உ.வே. சாமிநாதையர் நூல் நிலையம்7ஆம் பதிப்பு, 2017)306.

19. உதாரணம்:

ஆசுஇல் தெருவில் நாய் இல் வியன் கடை
செந்நெல் அமலை வெண்மை வெள்இழுது
ஓர் இற் பிச்சை ஆர மாந்தி
அற்சிர வெய்ய வெப்பத் தண்ணீர்
சேமச் செப்பிற் பெறீஇயரோ நீயே
மின்னிடை நடுங்கும் கடைப்பெயல் வாடை
எக்கால் வருவது என்றி
அக்கால் வருவர் எம் காதலோரே (குறுந். 277)

இச்செய்யுளில் ஓர் இற் பிச்சை என வருவது காண்க. தோழி கூற்றாக அமைந்த இச் செய்யுளில் அவள் யாரையோ விளித்துப் பேசுகிறாள். அவர் யார் என்பது வெளிப்படையாக இல்லை. ஆயினும் அவர் குற்றமற்ற தெருவிலே, நாய் இல்லாத இல்லத்திலே (மாமிசம் அற்ற) வெண்ணெய் கலந்த சோற்றினை ஓர் இல்லத்திலே மாத்திரம் பிச்சையாகப் பெற்று உண்ணும் விரதத்தை உடையவர். கமண்டலத்தை (சேமச் செப்பு) கையிலே கொண்டவர் என்ற குறிப்புகள், அவர் பார்ப்பனர் என்பதையும் வாடைக்காலம் எப்போதுவரும் என்று அவரிடம் வினவுவது அவர் சோதிடம் கணிதம் வல்லவர் என்பதையும் உணர்த்துகின்றன. இச்செய்யுளில், 'நாய் இல் வியன்கடை' என்று உள்ளதுபோலவே பெரும்பாணற்றுப் படையில் வரும் பார்ப்பனர் குடியிருப்புப் பற்றிய விவரத்திலும் 'ஞமலி (நாய்) துன்னாது' என்ற குறிப்பு வருதல் அவதானிக்கத்தக்கது.

"பைஞ்சேறு மெழுகிய படிவ நன்னகர்.
மனையுறை கோழியொடு ஞமலி துன்னாது
வளைவாய்க் கிள்ளை மறைவிளி பயிற்றும்
மறைகாப்பாளர் உறைபதி"
(பெரும்பாண். 298-301)

இன்னாநாற்பது (3) 'பார்ப்பார் இல் கோழியும் நாயும் புகல் இன்னா' என்கிறது.

இவையாவும் பார்ப்பனரின் படிம ஆசாரநடை முறை பற்றிய விவரிப்புகளே. மேற்படி பெரும்பாணாற்றுப்படை அடிகளில் பார்ப்பனர் இல்லத்தை, 'படிவ நன்னகர்' (ஆசார இல்லம்) எனச் சுட்டுவது அவதானிக்கத்தக்கது.

20. மு.காசிவிசுவநாதன், கலித்தொகை நச்சினார்கினியர் உரையுடன் (பாகனேரி: தனவைசிய இளைஞர்தமிழ்ச்சங்கம், 1938)45

21. அ.மா.பரிமாணம் கு.வெ. பாலசுப்பிரமணியன் (ப.ஆ.) பரிபாடல் மூலம் உரையும் (சென்னை: நியூ செஞ்சுரிபுக் ஹவுஸ் பிரைவேட் லிமிடட் 2004) 854

22. அ.மா.பரிமாணம் கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ.) அகநானூறு மூலம் உரையும் (சென்னை: நியூ செஞ்சுரிபுக் ஹவுஸ் பிரைவேட் லிமிடட் 2004) 314

23. அ.மா.பரிமாணம் கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ.) பரிபாடல் மூலமும் உரையும் (சென்னை: நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடட், 2004) 100

24. அ.மா.பரிமாணம் கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ.) பத்துப்பாட்டு மூலமும் உரையும் (சென்னை: நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடட், 2004)327

25. புலியூர்க் கேசிகன் (உ.ஆ.) மணிமேகலை (சென்னை: பாரதிநிலையம், 1965) 6

26. ச.வே.சுப்பிரமணியன் (ப.ஆ.) தமிழ் இலக்கண நூல்கள் (சிதம்பரம் மெய்யப்பன் பதிப்பகம், 2007)80

27. எஸ்.வையாபுரிப்பிள்ளை (ப.ஆ.) சங்க இலக்கியம் முழுவதும் பாட்டும் தொகையும் (சென்னை:முல்லைநிலையம், 2015) 17, 18

28. எஸ். வையாபுரிப்பிள்ளை, தமிழ்ச் சுடர்மணிகள் (சென்னை: பாரதிநிலையம், 1925) 10

29. கார்த்திகேசு சிவத்தம்பி, தமிழில் இலக்கிய வரலாறு, (சென்னை: நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடட், 2004) 136

30. மேற்படி, 134, 135

# CONTRIBUTION OF TAMIL WORDS TO ENGLISH DICTIONARY - AN ETYMOLOGICAL STUDY

**Dr. K.S. Antonysamy**
Associate Professor & Head,
Department of English,
Loyola College, Chennai

English language has been evolving ever since the language was recognized E been constantly increasing from contributions of world languages, technological developments and colonialism. Several words have been adopted from other languages such as French, Latin, Greek, Dutch, Spanish and Indian Languages especially Tamil. The etymological research shows the significant influence of Tamil words on English language. Tracing the etymological sense of some of English words indicates clearly the strong derivation that they have from Tamil words.

## Use of Etymology

There are many avenues of research having Dictionary as a focal point. Studying the roots of words, which will help to trace history, is one such area of research. Researches on Etymological nature of English language prove that it is worth exploring the origins of words to discover the richness of source languages and the impact created by such characteristic traditions. They enable the better understanding of the words. For instance, the noun, 'boycott', entered the English language during the Irish "Land War" and was derived from the name of Charles C. Boycott, an English land agent in 19th century Ireland who refused to reduce rents for his tenant farmers and was subject to social ostracism organized by the Irish Land League in 1880. As a verb, to boycott means to stop buying or using the goods or services of a certain company or country as a protest and the noun boycott is the protest itself. Another example could be 'stepmother' or 'stepdaughter' that suggests the derivation from the word, 'step'. A stepchild is one step removed from its natural parent. Further, 'step' goes back to a word meaning 'bereaved. Similarly, several other researchers share Samuel Johnson's opinion that bonfire is a good fire' from French bon, but it means 'bonfire.' Old bones were used as fuel down to the 1800s. The vowel o was shortened before (a regular change before two consonants), and a native English word began to look half-French. Bon voyage means good voyage.

There is something called folk or popular etymology. When people hear a foreign or unfamiliar word for the first time, they try to make sense of it by relating it to words they know well. They guess what it must mean and often guess wrongly. However, if enough people make same wrong guess, the error becomes part of the language. Such erroneous forms are called folk or popular etymologies. The word, 'bridegroom' provides a good example. The Middle English form was 'bridgome', which goes back to Old English 'brydguma', from 'bride' and 'guma', 'man.'

However, gome died out during the Middle English period. By the 16th century its meaning came to be popularly replaced by a similar-sounding word, grome, 'serving lad.' This later developed the sense of 'servant having the care of horses,' which is the dominant sense today but bridegroom never meant anything more than 'bride's man'.

## English words of Tamil origin

Just as etymological sense of words provides interesting clues of their origin and meaning derived from usage, culture, society and other languages, analysis of words from Tamil language opens up avenues of discussions and deliberations. It could be another potential area of research. To start with, the word, 'anchor' was originated from Tamil word, Nanguram. The English word, anchor, come from 'Angura', the Greek word, 'Angur', the Latin word, 'Ankor', the old English word and finally 'Anchor', the English word in usage now. Probably, 'mango' could have come from Tamil word, 'manga' and accepted into mainstream English usage due to Portuguese interaction and trading along the Indian coastline. In Portuguese, it is said 'manga' too. Interestingly, 'anaconda' is the word of Tamil origin, anai-kondra' meaning elephant killer.

'Peninsula' is another English word that has strong roots in Tamil. The word has to be split into three sub words in Tamil as Pen - in - Sula. 'Pen' in Tamil means woman and the word 'sula' suggests that she is pregnant. The word 'in' that comes in between the pen-in-sula conveys the same meaning ofan apostrophe's'. Thus, Pen-in-sula in Tamil conveys the meaning of protruding stomach of the pregnant lady to refer a country of its protruding land space intosea. This 'pen-in-sula' over a period of time became "peninsula' in English. It is clearer when its equivalent Sanskrit word is analyzed for its origin and meaning. In Sanskrit, it is called 'DweepaGarbam'. Dweepam is an island and Garbam also refers to a pregnant lady. This is how the word got into English, though its roots are in Tamil.

Tracing the etymology of the word 'Sugar' in English, one would definably understand that it has got Tamil origin. It is a fact that westerners were not aware of a sweetener from the sugar cane until they invaded India. The only sweeter they knew was honey. When they came to India, they saw farmers extracting juice of cane sugar. In Tamil, Sugar is called 'Sakkarai'. The process of extracting the sugar cane juice is to send it in between wheels to crush them. Wheels in Tamil are 'Sakkaram' and to crush, it is called "arai" in Tamil. Thus, 'Sakkaram' and 'Arai' has become Sakkarai to depict that juice of cane sugar is extracted by sending it between wheels. The Sakkarai became Shekkar in North India and Sukkar in Arabic and finally Sugar in English (Sakkarai - Shekkar - Sukkar to Sugar). Similarly, 'Kasu' of Tamil has become 'Cash' in English. -

Yet another English word that has a strong Tamil origin is 'Pyramid'. It impacted not only English but also Egypt. Grave yard in Tamil is called 'Sudukadu' if the body is cremated and 'idukadu' if the body is buried. As per the ancient practice, there were two places for the body to be buried and even today the custom is followed to an extent. When a President or a Prime Minister or Chief Minister dies, they are cremated in a different place other than the common graveyard. The Royal King and Queen were given a different place and the common citizen would get a different place for burial. Thus, the Royal burial place is called 'Perumldukadu'. 'Perum' is a Tamil word used to denote big, large, royal, great, etc. as it is in PeriyaKoil and Royal or Great as it is in 'Perumal'. Thus, the word called 'Perum-Idu-Kadu' has been over a period of time deformed to the word 'Pyramid' (Perum+Idu = Pyramid).

Thus, quite a number of English words are attributed to their origin in Tamil. The word, 'cup' may have derived from the Latin word, 'cuppa', which was used as 'Coppa' or 'Copa' in Italian, Spanish and other European language that has roots to Sanskrit word 'Kupah', and in turn roots to 'Kopai', which is still used in the Tamil.

## Interplay of Words

Tamil usage and its cultural practices have thus contributed substantially to the world languages especially English. English language too has the potential to adapt newer words from other resourceful languages. It is observed that the Oxford Dictionary Online is a warehouse of over 6,00,000 words. Despite the large arsenal, English language continues to coin, clip, and blend new words into existence, and the Oxford folks accept some of these new words into their dictionaries. Here are some more recent additions with their official definitions. The word, 'bromance'(n) refers to a close but non-sexual relationship between two men in parallel to 'romance' that means a relationship between two persons - a man and a woman - who are in love with each other but who are not married to each other. Similarly, 'upcycle' (v) may refer to reuse of discarded objects or materialin such a way as to create a product of higher quality or value than the original. 'Idiocracy' pointing toa government formed of people considered ignorant or idiotic is among 1,400 new words, senses, and phrases added in the latest update of the Oxford English Dictionary.

## Need of the hour

In this context of news words being coined, derived from other languages and newer technological developments, it is imperative to do research and contribute newer knowledge to the existing bundle. Unfortunately, most researchers give little importance to the discipline of historical linguistics, which looks at a word with its root and traces how the word came to be used. Moreover, controversies over the origin of words could be explored from historical perspectives and the authenticity of meaning of words in etymological sense may be ascertained. Further, etymological studies may be carried on varieties of theories proposed about relation between language and culture, world languages, close relation between language and environment meaning that world builds language and language builds world, etc. In sum, etymological study on origins of words, their lineage and historical evolution would prove to be an interesting and enriching area of research.

## Reference

Crystal, David. Cambridge Encyclopedia of the English Language, Cambridge University Press, 2003

English(IE) words that sounds like Tamil or originated from. Tamilhttps://aruniyan.wordpress.com/2011/08/08/english-words-that-sounds-like-tamil-or-originated-from-tamil/

Liberman, Anatoly. Word Origins: Etymology for Everyone. Oxford University Press, 2009 Online Etymology Dictionary: http://www.etymonline.com/index.php?term

நன்றி : தமிழ் அகராதியியலின் பரிணாமம் மற்றும் பரிமாணம்

# பாவாணர் பக்கம்

# பலபொருளொருசொற்கள்



'பலபொருளொருசொல்'என்பது ஒரு பொருட் பலசொல்லுக்கு எதிராகும். 'வேழம்' என்பது, கரும்பு, மூங்கில், யானை எனப் பலபொருள் தருதலின் பலபொருளொருசொல்லாம்.

பலபொருளொருசொற்கள் இருவகை நிலையில் ஏற்படுவதுண்டு. ஒன்று பல பொருட்கும் சிறப்புச்சொல் உண்டாயிருப்பது; இன்னொன்று அவை யில்லாதிருப்பது. கரும்பு, மூங்கில், யானை என்னும் மூன்று சொல்லும் இருக்கும்போது, அவற்றுக்குப் பொதுவாக வேழம் என்னும் சொல் தோன்றுவது சிறப்புச்சொல் உள்ள நிலை; அம் மூன்றும் இல்லாதபோது அது தோன்றுவது சிறப்புச்சொல் இல்லா நிலை; இவற்றுள், முன்னது மொழியின் பண்பாட்டையும், பின்னது அஃதின்மையையும் உணர்த்தும்.

முதலாவது ஒருபொருட்கு ஒரு சொல் ஏற்பட்ட பின்னரே அதன் நுண்ணியல்புகளையெல்லாம் குறிக்கும் ஒரு பொருட் பலசொற்கள் ஏற்படுதலின், ஒருபொருட் பலசொற்கள் மலிந்துள்ள மொழிகளிலெல்லாம் மொழிப் பண்பாட்டை யுணர்த்தும் பலபொருளொருசொற்களே காணமுடியும். தமிழ் ஒருபொருட் பலசொன் மலிந்த மொழியாதலின், ஏற்கெனவே தனித்தனி சொற்பெற்றுள்ள பல்வேறு பொருள்களை இனத்தன்மையும் ஒப்புமையும் பற்றி தொகுத்துச் சுட்டும் பலபொருளொருசொற்களே கொண்டுள்ளது.

பலபொருளொருசொற்கள், (1) உண்மை (2) போலி என இருதிறப்படும். இனத்தன்மையும் ஒப்புமையும் தொடர்பும் பற்றி பல்வேறு பொருள்களைத் தொகுத்துச் சுட்டும் பலபொருளொருசொல் உண்மையானதாம்.

எ-டு கேழல் என்பது, பன்றியையும் அதற்கினமான யானையையும் குறிப்பது; வாரணம் என்பது, நெடுங்கடலையும் வளைந்த சங்கையும் சங்குபோன்ற தலையையுடைய (அல்லது நிலத்தைக் கிளைக்கின்ற) கோழியையுங் குறிப்பது.

திரிவும் புடைபெயர்ச்சியுந் திரிபுங் காரணமாக ஒரு வடிவடைந்து ஒருசொற்போலத் தோன்றும் சொற்கள் போலியாம்.

எ டு : கத்தியைக் குறிக்கும் வாள் என்னுஞ் சொல் 'வள்' என்னும் வேரினின்றும், ஒளியைக் குறிக்கும் வாள் என்னும் சொல் விள் என்னும் வேரினின்றும் திரிந்தவையாகும்.

'மாள்', 'மாண்' என்னும் இருவினைச் சொற்களும் இறந்த காலத்திற் புடைபெயருங்கால், மாண்டான் என ஒரு வடிவடையும்.

'புழைக்கை' என்பதன் திரிபான பூட்கை என்னும் சொல்லும், 'பூண்கை' என்பதன் திரிபான பூட்கை என்னும் சொல்லும், திரிபின் காரணமாக ஒருவடிவடைந்தவையாகும்.

உண்மையான பலபொருளொருசொற்கள், ஓரினந்தழுவியவும், வேறினந் தழுவியவும் என இருவகைப்படும்.

## ஓரினந்தழுவியவை

புல் என்பது புல், கம்பு, மூங்கில் ஆகிய மூன்றையும்; தாழை என்பது கைதை, தெங்கு ஆகிய இரண்டையும்; குருகு என்பது நீண்டு வளைந்த கழுத்துள்ள நாரை, கொக்கு, அன்னம் முதலிய நீர்ப்பறவைகளையும் கொக்கலகு போல் மூக்குள்ள கொல்லுலைத் துருத்தியையும் குறிக்கும். இங்ஙனமே பிறவும்.

## வேறினந்தழுவியவை

ஓங்கல் = மலை, யானை.

மீன் = நீர்மீன், விண்மீன்.

தும்பி = ஒருவகை வண்டு, யானை. இவ்விரண்டும் தூம்புள்ள கைபோன்ற உறுப்பை (proboscis) யுடையவை.

சுவரொட்டி = ஒருவகை ஈரல், ஒருவகை விளக்கு, ஒருவகைப்புறா, ஒருவகை விளம்பரத்தாள். இவை யாவும் சுவரில் ஒட்ட அல்லது ஒட்டிவைக்கப்பெறுவன.

சில பொருள்கள் ஓரினம் அல்லது ஒத்த தன்மையுடையன என்பதை யுணர்த்த, அவற்றின் பொதுப்பெயர் இனப்பொருள்தொறும் வெவ்வேறடை பெற்று வழங்கும். அத்தகைய பெயர்கள் அடையடுத்த பலபொருளொருசொல்லாம்.

எ டு : அரசு, ஆற்றரசு, பூவரசு; வேம்பு (அல்லது நல்லவேம்பு), நாய்வேம்பு, கறிவேம்பு, நிலவேம்பு; நெல்லி, கீழ்வாய்நெல்லி; பருத்தி, வேலிப்பருத்தி; தாழை, கற்றாழை; வாழை, கல்வாழை; புலி, வரிப்புலி (வேங்கை), சிறுத்தைப்புலி, கழுதைப்புலி, ஈப்புலி.

சில பொருள்களின் இனத்தியன்மையை அல்லது ஒப்புமையைக் குறிக்க அவற்றின் தொகுதிப்பெயர் அல்லது பொதுப்பெயர் தொகைபெற்று வழங்குவதுண்டு. அத்தகைய பெயர்கள் தொகை பெற்ற பலபொரு ளொருசொல்லாம். எடு : முந்நிரை ஆடு, மாடு, எருமை என்னும் மூன்றன் மந்தை அல்லது கூட்டம்.

முக்கடுகம் : சுக்கு, மிளகு, திப்பிலி என்பன.

அடையடுத்ததும் தொகை பெற்றதுமான பலபொருளொரு சொற்கள், ஓரினந் தழுவியவாயுமிருக்கலாம்; வேறினந் தழுவியவாயுமிருக்கலாம்.

.......................................................................................................................................

# அகரமுதலி இயக்ககம் சார்பில் சொற்குவை மாணவத் தூதுவர் பயிற்சித் திட்டம் வாணியம்பாடி இமயம் கலை மற்றும் அறிவியல் கல்லூரியில் நடைபெற்றது





தமிழ்நாடு அரசு, தமிழ்வளர்ச்சித்துறை, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் மற்றும் வாணியம்பாடி இமயம் கலை மற்றும் அறிவியல் கல்லூரி இணைந்து நடத்திய “சொற்குவை“ மாணவத் தூதுவர் பயிற்சித் திட்டம் 2022 நிகழ்வு 04.03.2022ஆம் நாள் இமயம் கல்லூரியில் சிறப்புற நடைபெற்றது. நிகழ்வில், இமயம் கல்லூரித் தலைவர் திரு. வீ. ஜெயசங்கர் அவர்கள் தலைமை வகிக்க, செயலாளர் திரு. எம். கோபால், கல்லூரி முதல்வர் முனைவர் மு. சீனிவாசன் ஆகிய இருவரும் முன்னிலை வகித்தனர். அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கள் சிறப்புரை நிகழ்த்த, தமிழ் இயக்கப் பொதுச் செயலாளர் கவிமாமணி தி.மு. அப்துல்காதர், திருப்பத்தூர் தமிழ் வளர்ச்சி மன்ற நிறுவனர் தமிழ்ச்செம்மல் முனைவர் இரத்தின நடராசன், இசுலாமியாக் கல்லூரித் தமிழ்த்துறைத் தலைவர் தமிழ்ச்செம்மல் முனைவர் ப. சிவராஜி, திருப்பத்தூர் தூயநெஞ்சக் கல்லூரித் தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் பொன். செல்வகுமார், இமயம் கல்லூரி நிறுவனர் தமிழ்ச்செம்மல் முனைவர் ச. சரணவன், திருப்பத்தூர் டி.கே. ஆர். கல்வியியல் கல்லூரி முதல்வர் திரு. துரை. மணி ஆகிய தமிழறிஞர்கள் வாழ்த்துரை வழங்கி, மாணவர்களுக்குப் பயிற்சியளித்தனர். இமயம் கல்லூரி உதவிப் பேராசிரியர் க. யமுனா தொகுத்து வழங்க, உதவிப் பேராசிரியர் பா. யுகமணி நன்றி கூறினார்.

# அகரமுதலி இயக்ககத்தில் உலகத் தாய்மொழி நாள் விழா! பன்னாட்டு அறிஞர்கள் பங்கேற்றுக் கருத்துரை!

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தில், “எப்பொழுதும் முப்பொழுதும் எந்தமிழே!” என்னும் பொருண்மையில், 21.02.2022ஆம் நாள் "உலகத் தாய்மொழி நாள் விழா" நிகழ்வு வெகு சிறப்பாக நடைபெற்றது.




இணையவழியில் நடைபெற்ற நிகழ்வில், அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கள் தலைமையுரையாற்ற, தமிழ்வளர்ச்சித் துறையின் மேனாள் இயக்குநர் முனைவர் கா.மு.சேகர் அவர்கள் தொடக்கவுரையாற்றினார்.

நிகழ்வில், கனடா ரொறொன்ரோ பல்கலைக்கழகப் பேராசிரியர் முனைவர் சந்திரகாந்தன், பாரிசு பன்னாட்டு உயர்கல்வி தமிழாய்வு நிறுவன இயக்குநர் முனைவர் பேரா. ச.சச்சிதானந்தன், மலேசியத் தமிழ்மொழிக் காப்பகத்தின் கலைச்சொல்லாக்கக் குழுத் துணைத்தலைவர் திரு. இரா. திருமாவளவன், தென்கொரியா ஹன்யாங் பல்கலைக்கழகப் பேராசிரியர் முனைவர் ஹரிபாலன், இலங்கை, தென்கிழக்குப் பல்கலைக் கழகப் பேராசிரியர் முனைவர் க. இரகுபரன், பனாரஸ் இந்து பல்கலைக்கழக இந்திய மொழிகள்துறையின் உதவிப் பேராசிரியர் முனைவர் த.ஜெகதீசன், தில்லி பல்கலைக்கழக நவீன இந்திய மொழிகள்



(ம) இலக்கியத்துறைப் பேராசிரியர் முனைவர் தி. உமாதேவி, மதுரை காமராசர் பல்கலைக்கழகத் தமிழியல் துறைத் தலைவர் முனைவர் போ. சத்தியமூர்த்தி, தஞ்சாவூர், தமிழ்ப் பல்கலைக்கழக அயல்நாட்டுத் தமிழ்க் கல்வித்துறை பேராசிரியர் முனைவர் இரா. குறிஞ்சிவேந்தன், சென்னை பெண்கள் மேல்நிலைப் பள்ளி ஆசிரியர் முனைவர் மு. கனகலட்சுமி ஆகிய தமிழறிஞர்கள் பங்கேற்றுக் கருத்துரை வழங்கினார்கள்.

அடுத்த தலைமுறையினரிடம் தாய்மொழிப் பற்றை விதைக்க வேண்டிய தேவை குறித்தும், மழலைக் கல்வி தொடங்கி பொறியியல், மருத்துவம், வணிகம் உள்ளிட்ட அனைத்துத் துறைகளிலும் தமிழைக் கொண்டுசெல்ல முன்னெடுக்க வேண்டிய செயற்பாடுகள் குறித்தும், குழந்தைகளுக்கு நல்ல தமிழில் பெயர் சூட்டுவது தொடங்கி, சிந்தனை மொழியாக, பயிற்று மொழியாக, பேச்சுமொழியாக தமிழ் இருந்தால்தான் வாழும்மொழியாக அது நிலைபெறும் என்பது குறித்தும் அறிஞர்பெருமக்கள் கருத்துரைகளை வழங்கினார்கள்.

தமிழார்வலர்கள், பேராசிரியர்கள், அகராதியியல் வல்லுநர்கள் உள்ளிட்டோர் பங்கேற்ற நிகழ்வில், உலகத் தமிழியல் அறிஞர் பேரா. சண்முகதாஸ் அவர்கள் பங்கேற்று வாழ்த்துரை வழங்கினார்கள்.

அகரமுதலி இயக்ககப் பதிப்பாசிரியர் முனைவர் மா. பூங்குன்றன் அவர்கள் வரவேற்புரை வழங்க, நிறைவாக இயக்ககத் தொகுப்பாளர் முனைவர் வே. கார்த்திக் நன்றியுரை கூறினார். நிகழ்விற்கான தொழில்நுட்ப ஒருங்கிணைப்பினை வேல்ஸ் அறிவியல் (ம) தொழில்நுட்ப உயர் ஆராய்ச்சி நிறுவனத்தின் தமிழ்த்துறை இணைப்பேராசிரியர் முனைவர் இரா. பன்னிருகைவடிவேலன் அவர்கள் சிறப்புறச் செய்திருந்தார். நிகழ்வில் பங்கேற்ற அனைவருக்கும் இயக்ககத்தின் சார்பில் மின்சான்றிதழ் வழங்கப்பட்டது.

உலகுக்குத் தமிழ்மொழியின்
உயர்வுதனைக் காட்டுவது
சொற்பெருக்காம்

பாவேந்தர்

# அகரமுதலி இயக்ககத்தில் அருங்காட்சியகம், கல்வெட்டியல், தொல்லியல் துறைசார் வல்லுநர் குழுக்கூட்டம்!

## உள்ளாட்சிகளில் இன்று புழங்கும் வார்டு எனும் சொல்லுக்குக் கல்வெட்டுகள் குடும்பு என்ற சொல்லைப் பயன்படுத்தியதாக விளக்கம்!



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் சார்பில், துறைவாரியாக வல்லுநர் குழுக்கூட்டங்கள் நடத்தி, அந்தந்தத் துறைசார்ந்த கலைச்சொற்கள் தொகுக்கப்பட்டு சொற்குவையில் பதிவேற்றம் செய்வதற்கான நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டுவருகின்றன.

அந்தவகையில் இவ்வியக்ககத்தின் கூட்டரங்கத்தில், 12.02.2022 காரிக்கிழமையன்று அருங்காட்சியகம், கல்வெட்டியல், தொல்லியல் துறைசார் அறிஞர்கள் பங்கேற்ற வல்லுநர் குழுக்கூட்டம் காலை 10.00 மணியளவில் தொடங்கி நடைபெற்றது.

அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கள் கூட்டத்தின் நோக்வுரையாற்ற, பதிப்பாசிரியர் முனைவர் மா. பூங்குன்றன் அவர்கள் கருத்துரை வழங்கினார்.

கூட்டத்தில், சென்னை அருங்காட்சியகத்தின் நாணயவியல் பிரிவு காப்பாட்சியர் திரு.ந. சுந்தரராஜன், மேனாள் கல்வி அலுவலர் திருமதி ம.ந. புஷ்பா, சென்னை எப்சிபா பாரம்பரிய பாதுகாப்பு மையத்தின் கௌரவ இயக்குநர் முனைவர் வே. ஜெயராஜ், திருநெல்வேலி அரசு அருங்காட்சியக மாவட்டக் காப்பாட்சியர் சிவ. சத்தியவள்ளி, சென்னை தொல்லியல்துறை மேனாள் உதவி இயக்குநர் திரு.க. குழந்தைவேலன், சென்னை பண்டைய வரலாறு (ம) தொல்லியல்துறை வருகை பேராசிரியர் முனைவர் இரா. சேகர்,

உலகத் தமிழாராய்ச்சி நிறுவன உதவிப் பேராசிரியர் முனைவர் து.ஜானகி, சென்னை டாக்டர் உ.வே.சா. நூல்நிலைய காப்பாட்சியர் முனைவர் கோ. உத்திராடம், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத் தொல்லியல் (ம) கல்வெட்டியல் பட்டயப் பயிற்சிப் பயிற்றுநர் முனைவர் ஏ. ஜீவா, சென்னை வரலாற்றுத்துறை உதவிப் பேராசிரியர் முனைவர் ச. தீபிகா, சென்னை மாநிலத் தொல்லியல் துறை மேனாள் துணைக் கண்காணிப்பாளர் முனைவர் சீ. வசந்தி, சென்னை தொல்லியல் அலுவலர் திரு.ஶ்ரீ. குமார், சென்னை தமிழ்க் கலைமகள் (ம) சுவடி ஆராய்ச்சியலைச் சார்ந்த திரு. மு. அரி ஆகியோர் பங்கேற்றுத் தங்கள் துறைசார்ந்த 854 தமிழ்க் கலைச்சொற்களை வழங்கினார்கள். இப்போது ஊராட்சி நிருவாகங்களில் புழக்கத்தில உள்ள 'வார்டு' என்ற சொல்லுக்கு அக்காலக் கல்வெட்டுகளில் 'குடும்பு' என்ற சொல் பயன்படுத்தப்பட்டுள்ளதாகவும், உத்திரமேரூர் கல்வெட்டில் காணப்படும் குடும்பு என்ற சொல்லுக்கு “நிலம்“ என்றும் “வார்டு“ என்றும் பொருள் இருப்பதாகவும் வல்லுநர்கள் விளக்கினார்கள். மேலும், 'பெரும்ஈடு' என்ற தொல்தமிழ்ச் சொல்லே 'பிரமிடு' என்று எகிப்தியர்களால் எடுத்தாளப்பட்டதாகவும் வல்லுநர்கள் எடுத்துரைத்தனர்.

கலைச்சொல்லாக்கத்தை விரும்பி ஏற்றுச் செய்ய வேண்டும் என்றும், காலமாற்றத்திற்கேற்பச் சொற்களுக்குப் புதிய பொருத்தமான விளக்கங்கள் வரப்பெற்றால் அவற்றையும் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்றும், சங்க இலக்கியச் சொற்களுக்கென்றே தனியாக வேர்ச்சொல் அகராதி உருவாக்கப்பட வேண்டும் என்றும் கூட்டத்தின்போது வல்லுநர்கள் வலியுறுத்தினார்கள்.

கூட்ட நிகழ்வுகளை இயக்ககத் தொகுப்பாளர் திருமதி ஜெ. சாந்தி அவர்கள் நெறிப்படுத்த, நிறைவாக தொகுப்பாளர் திரு. கி. இராமர் அவர்கள் நன்றியுரை கூறினார்.



# அகரமுதலி இயக்ககம் சார்பில் சொற்குவை மாணவத் தூதுவர் பயிற்சித் திட்டம் மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தில் நடைபெற்றது




தமிழ்நாடு அரசு, தமிழ்வளர்ச்சித்துறை, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம், மதுரை காமராசர் பல்கலைக்கழகத் தமிழியல்துறை மற்றும் தமிழியற்புலம் இணைந்து நடத்திய **சொற்குவை மாணவத் தூதுவர் பயிற்சித் திட்டம் 2022** மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தின் சேதுபதி அரங்கில் 25.02.2022ஆம் நாள் நடைபெற்றது.

பயிற்சித் திட்டத் தொடக்கவிழா நிகழ்வில், பல்கலைக்கழகத் தமிழியல் துறை (ம) தமிழியற்புலத் தலைவரும், திருக்குறள் இருக்கையின் இயக்குநருமான (பொ.) முனைவர் போ.சத்தியமூர்த்தி அவர்கள் வரவேற்புரை வழங்கினார்.

மதுரை காமராசர் பல்கலைக் கழகப் பதிவாளர் (பொ.) பேரா. வை.சி. வசந்தா அவர்கள், தமிழ்மொழியின் தொன்மை குறித்தும், அதன் சிறப்புக் குறித்தும் எடுத்துரைத்ததோடு, தமிழின் இன்றைய நிலையையும் அதன் வளர்ச்சிக்காக மாணவர்கள் ஆற்ற வேண்டிய கடமைகள் குறித்தும் எடுத்துரைத்துத் தலைமையுரையாற்றினார்.

மதுரை செந்தமிழ்க் கல்லூரி முதல்வர் (பொ.) முனைவர் கி. வேணுகா அவர்கள், இலக்கிய இலக்கண வளம் நிறைந்த தமிழ்மொழியை மாணவர்கள் தங்களது முயற்சியால் காலத்திற்கேற்பப் புத்தாக்கம் செய்து வளர்ச்சிபெறச் செய்ய வேண்டும் என்று கூறி வாழ்த்துரை வழங்கினார்.

அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கள் சிறப்புரையாற்றுகையில், அகரமுதலி இயக்ககம் அகராதி உருவாக்கம் மற்றும் தமிழ்க்கலைச்சொல்லாக்கம் உள்ளிட்ட மொழிக்காப்புப் பணிகளைச் செய்துவருவதாகத் தெரிவித்தார். மேலும், இளைய தலைமுறை மாணவர்கள் தாய்மொழிப்பற்று மிக்கவர்களாகவும், அதேவேளையில் பன்மொழிப் புலமை வாய்ந்தவர்களாகவும் விளங்க வேண்டும் என்றும், நாள்தோறும் பெருகிவரும் பல்வேறு துறைசார்ந்த பிறமொழிக் கலைச்சொற்களுக்கு நிகரான தமிழ்க் கலைச்சொற்களை மாணவர்கள் அளப்பரிய பங்காற்றித் தமிழ்மொழியின் கலைச்சொல் வளத்தை உயர்த்த வேண்டும் என்றும் கூறினார்.



தொடக்கவிழாவையடுத்து நடைபெற்ற பயிற்சியரங்கத்தின் முதல் அமர்வில், திருவாடணை அரசு கலை மற்றும் அறிவியல் கல்லூரித் தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் மு. பழனியப்பன் அவர்கள் “அகராதியியலின் நோக்கும் போக்கும்“ என்னும் பொருண்மையிலும், 2 மற்றும் 3ஆம் அமர்வுகளில் முறையே திருச்சி அரசு கலை மற்றும் அறிவியல் கல்லூரித் தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் துரை. மணிகண்டன் அவர்களும், திருச்சி உருமு தனலெட்சுமி கல்லூரித் தமிழ்த்துறைத் தலைவர்




முனைவர் ந. விஜயசுந்தரி அவர்களும் “கணினித் தமிழ் வளர்ச்சி சிக்கல்களும் தீர்வுகளும்“ என்னும் பொருண்மையிலும் கருத்துரை வழங்கினார்கள்.

4ஆம் அமர்வில், திண்டுக்கல் காந்திகிராம கிராமிய நிகர்நிலைப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறை உதவிப்பேராசிரியர் முனைவர் சி. சிதம்பரம் அவர்கள், “மொழியியல் - சொற்பிறப்பு - கலைச்சொல்லாக்கம்“ என்னும் பொருண்மையிலும், 5ஆம் அமர்வில் மதுரை காமராசர் பல்கலைக்கழகத் தமிழியல்துறை (ம) தமிழியற்புலத் தலைவர் முனைவர் போ. சத்தியமூர்த்தி அவர்கள் “தூயதமிழும் இலக்கணமும்“ என்னும் பொருண்மையில் கருத்துரை வழங்கினார்கள்.

கல்லூரி மாணவர்களின் தமிழ்கலைச்சொல்லாக்கத் திறனை ஊக்குவிக்கும் வகையில் நடைபெற்ற நிகழ்வில் பங்கேற்றுப் பயிற்சிபெற்ற மாணவர்களுக்கு அகரமுதலி இயக்ககம் சார்பில், “சொற்குவை மாணவத் தூதுவர் 2022“ என்ற சான்றிதழ் வழங்கப்பட்டது.

நிகழ்வில் மாணவர்கள், பேராசிரியர்கள், தமிழார்வலர்கள் உள்பட பலர் பங்கேற்றனர்.

# ஆவணப்படம் தொடர்பான கலந்தாய்வுக் கூட்டம்



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கள் தலைமையில், வட்டார வழக்குச் சொற்பொருள் அகராதிக்கான கள ஆய்வுப்பணி குறித்த ஆவணப்படம் அணியம் செய்தல் தொடர்பாக ஒளிப்பதிவாளர் திரு.ம.மு.ரெங்கசாமி அவர்களுடன் ஒரு முன்னோட்ட கலந்தாய்வுக் கூட்டம் 10.02.2022 ஆம் நாள் நடைபெற்றது.

# வட்டார வழக்குச் சொற்கள் குறித்த களஆய்வு



26.02.2022 ஆம் நாள், தேனி மாவட்டம் கம்பம் வட்ட சுற்றுவட்டாரப் பகுதிகளைச் சேர்ந்த திரு. பு.பூபாலகிருஷ்ணன் அவரகளிடமும் மற்றும் பகுதிவாழ் மக்களிடமும் அவர்கள் பேசும் வட்டார வழக்குச் சொற்கள் குறித்த களஆய்வினை அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கள் மேற்கொண்டார். கள ஆய்வின்போது அகரமுதலி இயக்ககத் தொகுப்பாளர் திரு.வே.பிரபு உடனிருந்தார்.

வழக்கு எனப்படுவது உயர்ந்தோர் மேற்றே
நிகழ்ச்சி அவர் கட்டு ஆகலான.

தொல்காப்பியம் - 1592

# பன்மொழி அகராதி குறுஞ்செயலி




தமிழைப் பிறமொழியினருக்குக் கற்பிக்கும் வகையில் திராவிட மொழிகள் உட்பட பிற மொழிகளில் பாடநூல்களும் பன்மொழி அகராதியுடன் தமிழ் கற்பிக்கும் குறுஞ்செயலிகளும் உருவாக்குதல் தொடர்பான 2ஆவது கூட்டம் அகரமுதலி இயக்ககத்தில் 17.02.2022ஆம் நாள் நடைபெற்றது. இக்கூட்டத்தில் சென்னைப் பல்கலைக்கழகக் கன்னடத் துறைத் தலைவர் முனைவர் தமிழ்ச்செல்வி, தெலுங்குத்துறை மேனாள் தலைவர் முனைவர் சம்பத்குமார், இந்தித் துறைப் பேராசிரியர் முனைவர் சரசுவதி, அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ.விசயராகவன் மற்றும் இயக்கக அலுவலர்கள், பணியாளர்கள் பங்கேற்றனர்.

# தமிழ்க் கலைக்கழகக் கூட்டம்







தமிழ்க் கலைக்கழகத்தின் 103,104ஆவது கூட்டத்தில் முறையே 196+150=346 சொற்கள் ஏற்பு. கூட்டத்தில் தமிழ் வளர்ச்சித் துறை இயக்குநர் (மு.கூ.பொ.) முனைவர் ப.அன்புச்செழியன் அவர்கள், அலுவல்சாரா உறுப்பினர்களான முனைவர் கு.பாலசுப்பிரமணியன், முனைவர் இரா. கு. ஆல்துரை, திரு.நா.சு.சிதம்பரம் ஆகியோர் பங்கேற்றனர். அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன், கலைக்கழக அலுவல்சார் உறுப்பினர்கள் கலந்துகொண்டனர்.

# அகரமுதலி இயக்ககம் நெறிப்படுத்தும் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்கம்!

இன்றைய அறிவியல் தொழில்நுட்ப உலகில் நாள்தோறும் பெருகிவரும் பல்வேறு துறைசார்ந்த, பிறமொழிச் சொற்களுக்கு இணையான தமிழ்க்கலைச்சொற்களை உடனுக்குடன் வடிவமைத்து, மக்களின் பயன்பாட்டிற்குக் கொண்டுவருவது தமிழ்மொழியின் சொல்வள மேம்பாட்டிற்குரிய முகாமையான பணியாகும்.
செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் நெறிப்படுத்தலில், 2021 அக்டோபர் 1ஆம் நாளிலிருந்து வெள்ளிதோறும் இணையவழிப் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்கம் நடத்தப்பெறுகிறது. புறநிலையில் உள்ள சொல்லாக்க வல்லுநர்களின் துணையோடு தமிழின் கலைச்சொல் வளத்தை உயர்த்தும் நோக்கில் நடத்தப்பெறும் இப்பயிலரங்கத்தின் 20 - 23 வரையிலான அமர்வுகள் 2022 பிப்ரவரி11, 18, 25, மார்ச்சு 4 ஆகிய நாள்களில் நடைபெற்றன.
25.02.2022ஆம் நாள் நடைபெற்ற 22ஆம் அமர்வில், அயர்லாந்து லிமரிக் பல்கலைக்கழக அறிவியல் ஆராய்ச்சியாளர் முனைவர் விஜய் அசோகன் பங்கேற்று, தாய்மொழியின் இன்றியமையாமை மற்றும் கலைச்சொல்லாக்கத்தின் தேவை குறித்து எடுத்துரைத்து வாழ்த்துரை வழங்கினார். பயிலரங்க அமர்வுகளில் அயல்நாட்டு அறிஞர்கள், உள்நாட்டு அறிஞர்கள் பங்கேற்று, பல்வேறு துறைசார்ந்த தமிழ்க் கலைச்சொற்களை அறிமுகம் செய்து உரையாற்றினர்.
சொல்லாய்வாளர்கள், சொல்லாக்க அறிஞர்கள், தமிழார்வலர்கள், ஆய்வாளர்கள், பேராசிரியர்கள் உள்ளிட்ட பலர் பங்கேற்றும் பார்த்தும் பயன்பெற்றனர். கலைச்சொற்களை அறிமுகம் செய்த சொலாக்க அறிஞர்களுக்கும், பங்கேற்பாளர்களுக்கும் இயக்ககத்தின் சார்பில் பாராட்டுச் சான்றிதழ்களும் பங்கேற்புச் சான்றிதழ்களும் வழங்கப்பட்டன.
அமர்வுகளில் பங்கேற்கும் அறிஞர்களின் ஒருங்கிணைப்பினைப் பாரிசு பன்னாட்டு உயர்கல்வி தமிழாய்வு நிறுவன இயக்குநர் முனைவர் பேரா. ச. சச்சிதானந்தம் அவர்களும், தொழில்நுட்ப ஒருங்கிணைப்பினைச் சென்னை வேல்ஸ் அறிவியல் (ம) தொழில்நுட்ப உயர் ஆராய்ச்சி நிறுவனத்தின் தமிழ்த்துறை இணைப் பேராசிரியர் முனைவர் இரா. பன்னிருகைவடிவேலன் அவர்களும் மேற்கொண்டனர்.

### 11.02.2022ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்



*கவிஞர் சி. சண்முகராசா*
*பகுதிநேர விரிவுரையாளர்,*
*தமிழ்த்துறை, அண்ணாமலைப் பல்கலைக்கழகம், கனடா வளாகம்*



*திரு. எட்வேட் யூட் நிக்சன்(ஈழபாரதி)*
*மேனாள் விரிவுரையாளர்*
*செந்தூரான் பல்தொழில்நுட்பக்கல்லூரி*
*புதுக்கோட்டை, பாரிசு*



*திரு. கண. இளங்கோவன்*
*துணைச் செயலாளர், தமிழ்க்கல்வி வளர்ச்சி மையம்,*
*யாங்கூன், மியான்மர்*



*திரு. இரா. நரசிம்மன்*
*(எ) சைபர்சிம்மன்*
*தொழில்நுட்ப வலைப்பதிவாளர்,*
*சென்னை*

### 18.02.2022ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்



*திரு. ரீ. ஜான் ஆரோக்கிய ரிச்சர்டு*
*தமிழார்வலர் / எழுத்தாளர்,*
*அயர்லாந்து*



*திரு. டேவிட் சகாயராசு*
*தமிழாசிரியர், பூச்சூன் உயர்நிலைப் பள்ளி, சிங்கப்பூர்*



*மரு. செல்வன் இரத்தினசாமி*
*குழந்தைகள் நல மருத்துவர்,*
*ஈரோடு*



*திரு. கு. சேது சுப்பிரமணியன்*
*மேனாள் இணை இயக்குநர்,*
*வேளாண்மைத்துறை,*
*சிதம்பரம்*

## 25.02.2022ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்

முனைவர் மெய். சித்ரா
பகுதிநேர விரிவுரையாளர்,
ஸ்கோப், ஹாங்காங்
மாநகர் பல்கலைக்கழகம்,
ஹாங்காங்



திரு. சு. துஷ்யந்த்
தலைமை ஆசிரியர்,
சிவ ஒளி மின்னிதழ், பிரான்சு



மரு. அ. செந்தில்
தலைவர் (2020), இந்திய
குழந்தை மருத்துவக் குழுமம்,
தமிழ்நாடு மாநிலப் பிரிவு



திரு. கி. முத்துராமலிங்கம்
இயக்குநர், பயிலகம், சென்னை



## 04.03.2022ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்

திருமதி ஆதம்மாள் செயப்பிரகாசம்
அரசு மேல்நிலைப்பள்ளி ஆசிரியை,
சுவீடன்



திரு. ந. சபேசன்
வணிகவியலாளர்,
பிரான்சு



திரு. கோ. தாமரைக்கோ
அறிவியல் கலந்தாய்வுரைஞர்,
செம்படுகை நன்னீரகம்,
புதுச்சேரி



முனைவர் அ. ஷர்மிளா பானு
வடக்கு மண்டல மேலாளர்,
ஹைஃகான் மெஷின்ஸ்,
கோவை



# அறிஞர்கள் வழங்கிய கலைச்சொற்களுள் சில :

**கவிஞர் சி. சண்முகராசா**

| | |
|---|---|
| Cognition | மனவினை |
| Cognitive Impairment | மனவினைப் பிறழ்ச்சி |
| Perception | புலனுணர்வாற்றுமை |
| Perceptual Disorder | புலனுணர்வாற்றமைக் கோளாறு |
| Nonmaleficene | தீதாற்றாமை |

**திரு. கண. இளங்கோவன்**

| | |
|---|---|
| Break fast | பசியாறல். |
| Mineral Water | நன்னீர் |
| Beatroot | குருதிக் கிழங்கு. |
| Barry rice | கருப்பு கவுனி அரிசி |
| Mingalar pa | மங்கலமாகுக |

**திரு. இரா. நரசிம்மன் (எ) சைபர்சிம்மன்**

| | |
|---|---|
| Dark Web | மறை வலை |
| Webring | வலை வளையம் |
| Geek. | நுட்பர் |
| Mesh | குறு வலை |
| Nerd | மிகைநுட்பர் |

**திரு. எட்வேட் யூட் நிக்சன் (எ) ஈழ பாரதி**

| | |
|---|---|
| Pneumatic | காற்றழுத்தவியல் |
| Crankshaft | சுழல்தண்டு |
| Turbine | விசைச்சுழலி |
| Pantograph | வரைவுப்பெருக்கி |
| Blue Print. | வரைவுத்திட்டம் |

**திரு. ரீ. ஜான் ஆரோக்கிய ரிச்சர்டு**

| | |
|---|---|
| Fire Piace | கனலிடம் |
| Kindling | கனலிடச் சுள்ளி |
| Heater | கனலி |
| Cyber Forensics | இணையக் கூராய்வு |
| Snow Flake | பனி அவல் |

**திரு. டேவிட் சகாயராசு**

| | |
|---|---|
| Cloze Passage | முன்னுணர்வுக் கருத்தறிதல் |
| E-Pedagogy | மின்னியல் கற்பித்தல் உத்திகள் |
| Word Splash | சொற்சிதறல் |
| Civic Moral Education | குடிமை நன்னெறிக் கல்வி |
| Drafting | வரைவெழுதுதல் |

**மரு. செல்வன் இரத்தினசாமி**

| | |
|---|---|
| Induced Lactation | தூண்டிப்பாலூட்டுதல் |
| Relactation | மீண்டும் பாலூட்டுதல் |
| Postterm | நிறைமாதம்கடந்து மகப்பேறு |
| Lactiferous Sinus | பால் குழிப்பை |
| Talipes | கோணக்கால்(வளைந்தகால்) |

**திரு. கு. சேது சுப்பிரமணியன்**

| | |
|---|---|
| Barnyard Millet | குதிரைவாலி |
| Mulching | மூடாக்கு இடுதல் |
| Press Mud | கரும்பாலைக் கழிவு |
| Foxtail Millet | தினை |
| Seed Technology | விதைத் தொழில்நுட்பவியல் |

**முனைவர் மெய். சித்ரா**

| | |
|---|---|
| Semimagic Square | அரையிருமாயச் சதுரம் |
| Semibimagic Square | அரைமாயச் சதுரம் |
| Bimagic Square | இருமாயச் சதுரம் |
| Nanogon | ஒன்கோணம் |
| Ennaegram | ஒன்முனைவரைவு |

**திரு. சு. துஷ்யந்த்**

| | |
|---|---|
| Marriage chain | மங்கல அணி |
| Star chain | நட்சத்திரச் சங்கிலி |
| Diamond chain | வயிரச் சங்கிலி |
| Lock Bangle | பூட்டுக்காப்பு |
| Necklace | அட்டிகை |

**மரு. அ. செந்தில்**

| | |
|---|---|
| Neonatology | குழவியியல் |
| Pediatrics | குழந்தையியல் |
| Fetoscope | கருத்துடிப்பளவி |
| Grand Parenting | பாட்டன் வளர்ப்பு |
| Adolescence | விடலைப்பருவம் |

**திரு. கி. முத்துராமலிங்கம்**

| | |
|---|---|
| Free Software | கட்டற்ற மென்பொருள் |
| Bytecode | எண்ணுன்மி நிரல்தொடர் |
| Argument | அளபுரு,செயல்கூறுகளுக்குக் கொடுக்கப்படும் உள்ளீடு |
| Platform | இயங்குதளம் |
| Optical Mouse | ஒளிச் சுட்டி |

**திருமதி ஆதம்மாள் செயப்பிரகாசம்**

| | |
|---|---|
| Lagom | போதும்நிலை |
| Vandra | நீளுலா |
| Långstrump | நீட்காலுறை |
| Midsommar | முதுவனிற்திருவிழா |
| Midsommarstång | முதுவனிற்திருக்கம்பம் |

**திரு. ந. சபேசன்**

| | |
|---|---|
| Investment proposal | முதலீட்டு முன்மொழிகள் |
| Ranking Investment | முதலீட்டுத் தரவரிசை |
| Proposed capital | முன்மொழியப்பட்ட மூலதனம் |
| payback period method | திருப்பிச் செலுத்தும் காலமுறை |
| Right click | வலச் சொடுக்கு |

**திரு. கோ. தாமரைக்கோ**

| | |
|---|---|
| Abdominal aorta | அடிவயிற்றுப் பெருநாளம் |
| Adductor canal | உள்வாங்கிய குழற்கான் |
| Anterior rectus sheath | முற்பக்கமான குடலடி உறை |
| Aortic aneurysm | பெருநாளப் பையாக்கம் |
| Appendicular artery | குடல்வளரி நாளம் |

**முனைவர் அ.ஷர்மிளா பானு**

| | |
|---|---|
| Arthropoda | கூட்டுக் காலுடலிகள் |
| Echinodermata | முள்ளுடலிகள் |
| Exoskeleton | புற எலும்புடலிகள் |
| Tentacles | விரலிழைகள் |
| Grooves | வரி உருவம் |

..............................................................................

**உலக மகளிர் நாள் வாழ்த்துகள்**

உயிரைக் காக்கும்,உயரினைச் சேர்த்திடும்

உயிரினுக் குயிராய் இன்ப மாகிடும்

உயிரினும் இந்தப் பெண்மை இனிதடா!

- மகாகவி பாரதியார்